


| | | |
|---|---|---|
| மலர் 19<br>இதழ் 1 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | விகாரி<br>ஆடி 17உ. |


# திலகர் திருநாள்

இந்த இதழின் அட்டையிலே நான்கு மகா புருஷர்கள் காட்சியளிக்கிறார்கள். இந்த நான்கு மகான்களும் பாரத நாட்டுச் சரித்திரத்திலே முக்கியமான கட்டங்களில் தோன்றிப் பாரதத்தின் முன்னேற்றத்துக்கு வழிகாட்டியவர்கள்.

முதலில் பாலகங்காதர திலகரை எடுத்துக் கொள்வோம். திலகர் காலத்துக்கு முன் பாரத நாட்டுச் சுதந்திரக் கிளர்ச்சி வெறும் காகிதத் தீர்மானங்கள் போடுவதோடு அமைந்திருந்தது. ஆண்டுதோறும் காங்கிரஸ் மகாசபை கூடித் தீர்மானம் நிறைவேற்றிவிட்டால் பிரிட்டிஷ் அரசாங்கம் அனைத்து கொடுத்து விடும் என்று நம்பினார்கள்.

இந்தச் சூழ்நிலையில் திலகர் தோன்றி, ஒரு சில பேர்வழிகள் கூடித் தீர்மானம் நிறைவேற்றி விட்டால் கிடைக்கக்கூடிய காரியமல்ல சுதந்திரம் என்று கூறினார். நாட்டு மக்கள், படித்தவர்கள் படியாதவர்கள் ஏழைகள் தனவந்தர் அனைவரும் கூடிச் சுதந்திரம் கோரவேண்டும் என்றார். சுதந்திரக் கிளர்ச்சி மக்கள் கிளர்ச்சியாகப் பரிணமிக்க வேண்டும் என்றார். பாமர மக்களைச் சுதந்திரதாகம் கொள்ளச் செய்தார். பாரதநாட்டு ஜனசமுதாயத்தைத் தட்டி எழுப்பி விழிகொள்ளச் செய்தார். உறங்கிக் கிடக்கும் பாரத சிங்கத்திடமும் உயிரும், உணர்வும் துடிப்பும் இருக்கின்றன என்று அந்நிய ஆட்சிக்குக் காண்பித்தார். "சுதந்திர இயக்கத்தின் தந்தை" என்று எல்லோராலும் பாராட்டப்பட்டார். அந்த மகானின் திருநாளை ஒவ்வொரு ஆகஸ்ட் முதல் தேதி யன்றும் திலகர் திருநாள் என்று நாம் கொண்டாடி வருகிறோம்.

திலகர் வீறுகொண்டு எழச் செய்த மக்களை, அவர்கள் தேசபக்தி உணர்ச்சியைக் கொலையிலும் பலாத்காரத்திலும் செல்லாமல் புனிதமான மார்க்கத்தில் செலுத்தியவர் மகாத்மாஜி. அஹிம்சா வழியில், சத்தியாக்கிரகம் மூலம் பாரத மக்களின் சுதந்திரப் போராட்டத்தை நடத்தி வெற்றி கண்டவர் மகாத்மாஜி. மகாத்மாஜியின் இந்தப் பணி உலகுக்கொரு அதிசயமாகத் திகழ்ந்து வருகிறது.

ஒரு நாட்டுப் பெரும் மக்கட் சமுதாயத்தின் போராட்டத்தை அறத்தின் வழியிலும் தியாகத்தின் வழியிலும் நடத்திய மகா புருஷர்கள் உலக சரித்திரத்திலேயே கிடையாது. அந்த அதிசயத்தை நிகழ்த்தியே தீருவேன் என்று மகாத்மாஜி பிடிவாதமாக நின்றார். மகாத்மா காந்தியடிகள் பிடிவாதமாக இருந்தது அதிசயமில்லை. அவர் வகுத்த வழிக்கு ஒப்ப, லட்சக்கணக்கான பாரத மக்கள் தர்மத்தின் அடிப்படையில் தியாகங்கள் புரிந்து, தடியடிபட்டு, கடும் சிறைவாசம் அனுபவித்து உண்மையினின்று பிறழாமல் வாழ்ந்தார்களே, அந்த அதிசயத்தை என்னவென்று சொல்வது! அந்த அதிசயம்தான் இந்தத் தேசம் மகான்கள் பாதம் பட்ட தேசம், புண்ணிய தேசம், தர்ம தேசம் என்பதை நிரூபித்தது.

• • • •

நாம் சுதந்திரம் பெற்றோம். ஆனால் ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட சுதேச சமஸ்தானாதிபதிகளுக்கும் அளிக்கப்பட்ட பூரண சுதந்திரத்துடன் நமக்கும் சுதந்திரம் கிடைத்தது. அந்த சுதேச சமஸ்தானாதிபதிகள் ஒன்று சேர்ந்து 'இந்தியாவுடன் சேர முடியாது' என்று சொல்லியிருந்தால் நம் பாடு ரொம்பவும் தொந்தரவாகப் போயிருக்கும். அந்தப் பெரும் கஷ்டத்திலிருந்து காப்பாற்றி, உறுதியான தமது நடவடிக்கைகளினாலும் நெஞ்சுரத்தினாலும் அத்தனை சமஸ்தானங்களையும் பாரதத்துடன் இணைத்த பெருமை,

காந்தி' மகானின் தளபதியாக விளங்கிய ஸர்தார் வல்லபாய் பட்டேலுடையது.

இந்தப் பெருமையைவிட அவர் வாழ்நாள் முழுதும் பிரத்தியட்ச வாதியாக வாழ்ந்து வழி காட்டியதுதான் இன்று நினைவுகூர வேண்டிய விஷயம். 'கொள்கை எது? நடைமுறையில் எவ்வளவு தூரம் அந்தக் கொள்கையை அனுஷ்டிக்க முடியும்' என்று அனுபவம் வாய்ந்தவர். அதனால் அவர் எந்தக் கொள்கையையும் நடைமுறைக்கு ஏற்றதா என்ற நோக்கத்தோடே பார்த்துவந்தார்.

அவர் மறைவினால் காங்கிரஸ், ஒரு பிரத்தியட்சவாதியை இழந்து விட்டது. நேருஜியின் கற்பனைகளில் தோன்றும் கொள்கைகள் நடைமுறைக்கு உதவுமா என்று யோசனை செய்து சொல்லக்கூடிய சக்தியும் தைரியமும் உள்ளவர்களே காங்கிரஸில் அற்றுப் போய் விட்டார்கள்.

நமது விவசாயத்தின் தன்மையைச் சற்றும் உணராமல், நேருஜி ஒரு அபிப்பிராயம் வெளியிட்டால் அதற்கு 'ஆமாம்' பாட்டுப் பாடும் கூட்டமே பெருகி விட்டது. இதன் காரணமாக, காங்கிரஸ் நாளுக்குநாள் கம்யூனிஸ்ட் கட்சியாக மாறி வருகிறது.

இந்த நிலைமையைக் கண்டு வருந்தப்படுபவர்கள் எல்லாம் ஸர்தார் பட்டேலிருந்தால் தேசம் இவ்வளவு மோசமான நிலைக்கு வந்திருக்குமா என்று ஏங்குகிறார்கள். பாரத நாட்டிலுள்ள நடுத்தர வர்க்கத்தினர், விவசாயிகள், வர்த்தக சமூகத்தினர் அனைவரும் "விமோசனமே இல்லையா? பாரதம் கம்யூனிஸ நாடாக மாறிவிட வேண்டியதுதானா?" என்று ஏங்கி மனம் புழுங்கிக் கொண்டிருக்கும் போது, ராஜாஜி சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்திருக்கிறார்.

பாரத நாட்டுச் சரித்திரத்திலே, அதன் பண்பாட்டுக்கும் நாகரிகத்துக்கும் ஆபத்து விளையக் கூடிய சமயத்திலே இந்தப் புதுக் கட்சி தோன்றியிருக்கிறது.

ராஜாஜி இந்தத் தாய்த் திருநாட்டுக்கு எத்தனையோ மகத்தான தொண்டுகள் புரிந்திருக்கிறார். அந்தத் தொண்டுகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் விளங்குவது இந்தச் சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்திருப்பது.

**இந்தக் கட்சி பாரதநாட்டு மக்களின் அடிப்படை தர்ம உணர்ச்சியில் நம்பிக்கை வைத்துத் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது.**

மகாத்மா காந்தி சத்தியத்தின் அடிப்படையில் அஹிம்சையின் அடிப்படையில், சுதந்திரப் போருக்கு வாருங்கள் என்று அழைத்தாற் போல், ராஜாஜி, "பாரத நாட்டு செல்வ மக்களே, உங்கள் உள்ளத்தில் அடங்கியிருக்கும் சக்தியைத் திறந்து விடுங்கள்! ஏழ்மையை அகற்ற ஏராளமான தொழில்களைப் பெருக்குங்கள்! தனி மனிதனின் சுதந்திரத்தைக் காப்பாற்ற விழிப்படைந்து சுதந்திரக் கட்சியில் சேருங்கள்!" என்று அழைக்கிறார்.

அவர் அழைப்பு நல்ல எதிரொலியை மக்கள் உள்ளத்தில் எழுப்பியிருக்கிறது. மக்கள் புது உணர்ச்சி பெற்று விட்டார்கள். உற்சாகமும் ஊக்கமும் எங்கும் பரவலாகக் காண்கின்றன. பாரதநாட்டு மக்கள் பெருவாரியாகச் சுதந்திரக் கட்சியில் சேர ஆர்வத்துடன் துடிக்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரிந்து விட்டது.

சுதந்திரக் கட்சியின் பூர்வாங்க மகாநாடு திலகர் திருநாளாகிய ஆகஸ்ட் முதல் தேதியில் பம்பாயில் கூடுகிறது. கட்சி சம்பந்தமான விதிகள், முறைகள், சந்தா முதலியவற்றை அம் மகாநாட்டில் நிர்ணயிப்பார்கள்.

தமிழ்நாட்டு நல்லறிவுள்ள மக்கள் அனைவரையும் பாரத நாட்டின் சுதந்திரத்தையும், தனி மனிதனின் சுதந்திரத்தையும் பேணும் படி கேட்டுக் கொள்கிறோம்.

அதுமட்டுமல்ல; சுதந்திரக் கட்சியில் சேருவது, திலகர், காந்தியவர்கள், வல்லபாய் பட்டேல் ஆகியோருக்குச் செலுத்தும் அஞ்சலியாகவும் நன்றியாகவும் கருத வேண்டும்.

# சபாஷ்! ஜனநாயக காங்கிரஸ்!

சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை ஏற்றுக் கொள்ளும் எந்தக் கட்சியும் சுதந்திரக் கட்சியில் சேரலாம் என்று ராஜாஜி அழைப்பு விடுத்தார். அந்த அழைப்பை ஏற்று இந்திய தேசிய ஜனநாயக காங்கிரஸ் கட்சியினர் சுதந்திரக் கட்சியில் சேர ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றி, சேர்ந்தும் விட்டனர். இது சுதந்திரக் கட்சி நாளுக்கு நாள் பலம் பெற்று வருகிறது என்பதற்கு எடுத்துக்காட்டு.

'இந்திய தேசிய ஜனநாயக காங்கிரஸ் அங்கத்தினர்கள் முன்னமே காங்கிரஸில் இருந்தவர்கள். ஜனநாயக காங்கிரஸின் தலைவர் திரு வெங்கடகிருஷ்ண ரெட்டியார் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் உபதலைவராக இருந்தவர். தமிழ்நாட்டுக் காங்கிரஸின் எதேச்சாதிகாரப் போக்கைக் கண்டு பிடிக்காமல், வெளியேறினார். அவரைப் போலவே மற்றும் பல காங்கிரஸ்காரர்கள் வெளியேறினார்கள். அவர்கள் சேர்ந்து ஜனநாயக காங்கிரஸ் என்று கட்சியமைத்துச் சென்ற தேர்தலில் போட்டியிட்டுப் பல ஸ்தானங்களைப் பெற்றிருக்கிறார்கள். சென்னை சட்டசபையில் ஜனநாயக காங்கிரஸ்தான் முக்கிய எதிர்க்கட்சி. ஜனநாயக காங்கிரஸ் அங்கத்தினரான திரு வி. கே. ராமசுவாமி முதலியார்தான் எதிர்க் கட்சியின் தலைவர்.

ஜனநாயக காங்கிரஸ் தமிழ் நாட்டில் மதுரை, திருநெல்வேலி, ராமநாதபுரம் ஜில்லாக்களில் செல்வாக்குப் பெற்ற கட்சி. என்றும் அவர்கள் அகில இந்திய ரீதியிலே இயங்க வேண்டும் என்றே ஆரம்பத்திலிருந்து எண்ணம் கொண்டிருந்தார்கள். அதனால் அவர்கள் ராஜாஜி ஆரம்பித்த சுதந்திரக் கட்சியில் சேர்ந்தது இயல்பான முடிவுதான். அவர்கள் ஏகமனதோடு சுதந்திரக் கட்சியில் சேர்ந்தது பற்றி மகிழ்கிறோம்.

# கர்நாடக மகாநாடு

கர்நாடகம் என்றால் எப்படியோ தமிழில் பழைமை என்ற பொருள் வந்து விட்டது. அதுமட்டுமின்றி புதுக் கருத்துக்களையும் புதுக் கொள்கைகளையும் ஏற்க மறுப்பது என்ற பொருளும் வந்திருக்கிறது. ஆனால் இந்தப் பொருள் எல்லாம் முற்றும் தவறு என்று சொல்லக்கூடிய முறையில் கர்நாடக மக்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

கர்நாடக ராஜ்யத்தின் தலைநகரான பெங்களூரில் சுதந்திரக் கட்சியின் முதல் மகாநாடு நடைபெற்றிருக்கிறது. கர்நாடக ராஜ்யத்தின் பல பகுதிகளிலிருந்தும் சுமார் முந்நூறுக்கு மேற்பட்ட பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். இதன் பொருள் என்ன? புத்தம் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட சுதந்திரக் கட்சியைக் கர்நாடக மக்கள் முழு மனத்துடன் வரவேற்கத் தயாராக இருக்கிறார்கள் என்பதே அல்லவா?

இந்த மகாநாட்டைத் தார்வாரைச்சேர்ந்த ஸ்ரீ பி. எஸ். பட்டேல் துவக்கி வைத்தார். நாகபுரி தீர்மானத்தை நிறைவேற்ற முற்பட்டால், நாட்டில் குழப்பமும் கலவரமும் ஏற்படும். விவசாயிகள் தங்கள் நிலத்தைக் கூட்டுப் பண்ணையில் சேர்க்க முன்வரமாட்டார்கள். முடிவில் மோசடியும் குழப்பமும் கலவரமுமாக முடியும் என்று எச்சரிக்கை செய்தார் திரு பட்டேல்.

மகாநாட்டுக்குத் திரு பி. ராமசந்திரா ரெட்டி அவர்கள் தலைமை வகித்தார். திரு ராமசந்திரா ரெட்டி அவர்கள் முன்னாள் மேல் சபையின் சபாநாயகராக இருந்தவர். விவசாயத்துறையில் மிகுந்த அநுபவம் வாய்ந்தவர். அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் உபதலைவர்.

“முன்பெல்லாம் பிரிட்டிஷார் பிரித்தாளும் கொள்கையை அநுஷ்டித்து வந்தனர். ஆனால் நமது சர்க்காரோ (நிலத்தைப்) ‘பிரித்து நாசமாக்கு’ என்ற கொள்கையை அநுஷ்டித்து வருகின்றனர்!” என்று உணர்ச்சி வேகத்தோடு பேசியிருக்கிறார்.

இந்தக் கூட்டத்தில் சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு என். ஜி. ரங்காவும் பங்கெடுத்துக் கொண்டு பேசியிருக்கிறார்.

இந்த மகாநாட்டுக்குப் பல இடங்களிலிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்துள்ளன. அவற்றில் குறிப்பிட வேண்டியவை ராஜாஜியின் வாழ்த்தும் திரு பி. டி. ராஜன் அவர்கள் வாழ்த்தும்.

திரு பி. டி. ராஜன் அவர்கள் அகில இந்திய அடிப்படையில் சுதந்திரக் கட்சி தோன்றியிருப்பதை முழு மனத்துடன் வரவேற்றிருக்கிறார்.

கர்நாடகம் வழிகாட்டிவிட்டது. அதை யொட்டி, ராஜ்யத்துக்கு ராஜ்யம், ஜில்லாவுக்கு ஜில்லா, கிராமத்துக்குக் கிராமம், சுதந்திரக் கட்சி மகாநாடுகள் இனி நடைபெறவேண்டும்.

# என்ன சேதி?

## தக்ஷிணப் பிரதேசம்

கேரள நாட்டில் நிலவும் குழப்பங்களைப் பார்த்து, இப்பொழுதெல்லாம் பலர், “அன்றைக்கே ராஜாஜி சொன்னார்—தக்ஷிணப் பிரதேசம் ஏற்படுத்துங்கள் என்று. கேரளம், மைசூர், சென்னை—ஆகிய மூன்று ராஜ்யங்களையும் சேர்த்து ஒரு ராஜ்யமாக அமைத்திருந்தால் கம்யூனிஸ்டுகள் பதவிக்கே வந்திருக்க மாட்டார்கள் அல்லவா?” என்றெல்லாம் பேசிக் கொண்டிருக்கிறார்கள். இப்படிப் பேசுபவர்களில் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர் கேரளா பிரஜா சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் திரு கே. பி. மேனன். அவர் சென்ற வாரம் தக்ஷிணப் பிரதேசக் கொள்கையை மீண்டும் பரிபூரணமாக வரவேற்றிருக்கிறார்.

கேரளக் கிளர்ச்சிக்கு முக்கிய தலைவரான ஸ்ரீ மன்னத்துப் பத்மநாபன் அவர்களும் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில், “தக்ஷிணப் பிரதேசம் ஏற்படுத்தினால்தான் கம்யூனிஸ்ட் ஆதிக்கம் ஒழியும் என்றால் நான் தக்ஷிணப் பிரதேசத்தை வரவேற்கத் தயாராய் இருக்கிறேன்” என்று குறிப்பிட்டார்.

தக்ஷிணப் பிரதேசக் கருத்தை கம்யூனிஸ்டுகளை நீக்குவதற்காகவோ, மற்றொரு கட்சியை வரவேற்பதற்காகவோ ராஜாஜி சொல்லவில்லை. இந்த மூன்று ராஜ்யங்களும் பொருளாதாரத் துறையில் ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்புடையவை. ஆதலால் இவை சேர்ந்திருந்தால் தென்னகத்தின் பொருளாதார முன்னேற்றம் வெகு விரைவில் ஏற்படும் என்று கருதி இக்கொள்கையைத் தெரிவித்தார். தென்னக மக்களின் உணர்ச்சியை ஒருமுகமாக வெளியிடவும், வடநாட்டிலுள்ள உத்தரப் பிரதேசத்துக்குச் சமமான பலமுள்ள ஒரு பெரிய ராஜ்யம் தென்னகத்தில் இருக்க வேண்டும் என்பதற்காகவும் தக்ஷிணப் பிரதேச அமைப்பை வற்புறுத்தினார். நாட்டு நலனே மதிக்காமல் குறுகிய கருத்துக்கள் கொண்ட அரசியல்வாதிகள் சிறிய ராஜ்யமாக இருந்தால் தங்களுக்குச் சௌகரியமாக இருக்கும் என்று கருதி, தக்ஷிணப் பிரதேசத்தை ஆதரிக்கவில்லை.

## வர்த்தக சம்மேளனம்

எனினும் தென்னகத்து வர்த்தகர்கள், ஆந்திர—தமிழ்—மைசூர் — கேரள—ராஜ்யத்தைச் சேர்ந்த வர்த்தகர்கள் சேர்ந்து பணியாற்றினால்தான் தென்னகத்தில் எதையேனும் சாதிக்க முடியும் என்ற முடிவுக்கு வந்து மூன்று முறைகளாகத் தென்னக வர்த்தக மகாநாடு கூட்டி வருகிறார்கள். இந்தக் கருத்துக்கு ஆதிகர்த்தா பெங்களூர் தொழில் பிரமுகரான திரு பி. கே. சாரங்கபாணி

முதலியார் அவர்கள். அவர்தான் தென்னக வர்த்தகர்கள் மகாநாட்டைப் பெல்காமில் முதன் முதலில் கூட்டியவர். இந்தத் தடவை மாநாடு சென்னையில் கூட்டப்பட்டது. தென்னகத்திலிருந்து ஆயிரக்கணக்கில் வர்த்தகர்கள் வந்து இந்த மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். இந்தத் தடவை மகாநாட்டுக்குத் திரு பி. கே. சரக்கபாணி முதலியாரும் தலைமை வகித்தார். அவரை 'தென்னக வர்த்தக மகாநாட்டின் தந்தை' என்று சென்னை வர்த்தக சங்கத்தின் தலைவரும் வரவேற்புக் குழுத் தலைவருமான திரு கே. வி. சீனிவாசன் பாராட்டினார்.

## திட்டமந்திரியின் யோசனை

இந்த மகாநாட்டில் கலந்துகொண்ட திட்டமந்திரி திரு சி. சுப்பிரமணியம் தென்னகத்தில் ஒரு எஃகு தொழிற்சாலை ஏற்படுத்தும்படி நீட்டக் கமிஷனை மகாநாட்டில் பகிரங்கமாகக் கேட்டுக்கொண்டார். நெய்வேலியில் கிடைக்கும் பழுப்பு நிலக்கரி கொண்டு இரும்பை உருக்கும் தொழிற்சாலை ஏற்படுத்த முடியும் என்று நம்புகிறார். திட்டமந்திரி திரு சி. சுப்பிரமணியம் ஒரு எஃகுத் தொழிற்சாலையை ஏற்படுத்தும் முயற்சியில் வெற்றி பெற்று விட்டால் தமிழ் நாட்டு மக்களின் பாராட்டைப் பெறுவார் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஒரு விஷயம்; சர்க்காரின் வரிக் கொள்கை இப்படியே தொடர்ந்து போனால், எஃகை வாங்கி உபயோகிக்கும் மக்கட் சமுதாயம் நாட்டில் இல்லாமற் போய்விடலாம். அதனால் எஃகு தொழிற்கூடம் ஏற்படுத்தியும் பயனற்றுப் போய் விட்டால் என்ன செய்வது என்பதையும் திட்டமந்திரி யோசித்தல் நலம்.

## தைரியம் வேண்டும்

வர்த்தக சமூகத்தினர் முன்பெல்லாம் மிகத் தைரியமாகத் தேசிய சக்தியோடு கலந்து கொண்டனர். காந்திமகானின் ஒத்துழையாமை இயக்கத்துக்கும் பல விதங்களில் உதவி புரிந்தனர். தாங்களும் தேச பக்தி மிகுந்த இந்தியர்கள் என்பதைப் பலவிதங்களிலும் காண்பித்துக் கொண்டனர். இப்படி அந்நிய ஆட்சியில் தைரியமாக நடந்து கொண்ட வர்த்தக சமூகத்தினர், இப்போது நமது இந்திய அரசாங்கத்தைக் கண்டு ரொம்ப நடுக்கம் கொண்டிருக்கின்றனர். அரசாங்கத்துக்கு விரோதமாகப் பேசினால் எந்த விதமான கஷ்டத்துக்கும் தண்டனைக்கும் உள்ளாவோமோ என்று பயப்படுகின்றனர். இந்திய அரசாங்கத்தின் வரிமுறைகள் கடுமையாக இருக்கின்றன என்று கூறிவிட்டால் என்ன கஷ்டத்துக்கு உட்படுத்தப்படுவார்களோ என்று பயப்படுகின்றனர். ஆகவே, இந்திய வர்த்தக சமூகத்தினருக்கு இன்று முக்கியமாகத் தேவைப்படுவது தைரியம்!

இந்தத் தைரியத்தை எந்தப் பாங்கியில் கடன் வாங்குவது என்று தெரியாமல் வர்த்தக சமூகத்தினர் விழித்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு அந்தப் பெரும் பாங்கியைச் சென்ற வர்த்தக சம்மேளனத்தில் ராஜாஜி பேசிய போது அறிமுகப்படுத்தி வைத்தார்.

"ஆண்டவன் திருவடிகளில் நமது வாழ்வை ஒப்படைத்து விட்டு, மனதுக்குச் சரி என்று பட்டதைத் தைரியமாகச் சொல்லுங்கள்; தைரியமாக நடவுங்கள். ஆண்டவன்தான் நமக்குத் தைரியம் அளிக்கக்கூடியவன்" என்று அழுத்தம் திருத்தமாக ராஜாஜி சொன்னார்.

> திருவடியைப் பணிந்துநிற்கும்
>
> செல்வமும், தொழிற்பெருக்கு
>
> வருக வருகவென்றே—இனியே
>
> மகிழ்வுறத் திருப்போமடி!

என்று கூறினார் பாரதியார்.

"வருக வருக—வருவது வரட்டும்" என்ற துணிச்சல் அளிக்கக் கூடியவள் அன்னை பராசக்திதான் என்பதைப் பாரதியாரும் கூறியிருக்கிறார். வர்த்தக சமூகத்தினர் ராஜாஜியும், பாரதியாரும் காட்டிய வழியைப் பின்பற்றித் தைரியமாக நடந்து கொள்வார்கள் என்று நம்புகிறோம். பாரத நாட்டின் எதிர்காலம் அவர்கள் கையிலும் இருக்கிறது என்பதை அவர்கள் உணர வேண்டும்.

## நேயர்களுக்கு நன்றியும் வணக்கமும்

இந்த இதழிலிருந்து கல்கிக்கும் பத்தொன்பதாவது ஆண்டு தொடங்குகிறது.

சென்ற பதினெட்டு ஆண்டுகளாகத் தமிழ் பெருமக்களுக்குத் தொடர்ந்து பணியாற்றி வரும் பேற்றைப் பெற்றதுபற்றி மகிழ்கிறோம்.

பாரத மக்களின், முக்கியமாக, தமிழ் மக்களின் நலனையே அல்லும் பகலும் சிந்தித்து வரும் பாரதநாட்டின் அரும் தலைவர் ராஜாஜியின் கொள்கைகளைப் பின்பற்றியே தமிழ் மக்களுக்கு அரசியல் துறையில் அரும் பணியாற்றி வந்திருக்கிறோம். இதைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறோம்.

இலக்கியத் துறையில் டி. கே. சி.க்குப் பிறகு சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை, பேராசிரியர் அ. சீனிவாசராகவன் முதலிய அறிஞர்களின் இலக்கியக் கட்டுரைகளை வழங்கி வந்திருக்கிறோம். திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களின் கட்டுரைகளை இப்போது வழங்கி வருகிறோம்.

பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தமிழனது சரித்திரம் எத்தனை மகத்தான சரித்திரம் என்பதைச் சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் மூலம் அறிமுகப்படுத்தி வைத்துத் தமிழ் மக்களின் பெருமை கொள்ளச் செய்தார். அவர் காட்டிய நெறியைப் பின்பற்றி திரு நா. பார்த்தசாரதி அவர்களின் "பாண்டிமாதேவி"யை அளித்தோம். அதே வழியில் அகிலன் அவர்கள் எழுதும் "வேங்கையின் மைந்தனை" அளிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

நவநவமான கருத்துக்களை உணர்ச்சியுள்ள நடையில் எழுதக்கூடிய பல புது சிறுகதை எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தி வருகிறோம்.

இவற்றுக்கெல்லாம் காரணம் தமிழ்ப் பெருமக்கள், கல்கி நேயர்கள் கல்கியின்பால் கொண்டுள்ள அன்பே. அந்த அன்பின் காரணமாக இன்னும் பல புது முயற்சிகள் வருகிற ஆண்டுகளில் மேற்கொள்ள முடியும் என்ற நம்பிக்கை உண்டாகிறது.

அன்பர்களுக்கு வணக்கம்.

# கதிர்காமக் கடவுள்

கொழும்பு, ஜூலை 21க.

இலங்கையின் தேசிய வாழ்வைச் சீர்குலைத்துக் கொண்டு சென்ற மூன்று வாரங்களாக நடைபெற்று வந்த துறைமுக வேலை நிறுத்தங்கள் இவ்வாரம் ஒருவிதமாக முடிவுக்கு வந்து விட்டன. இந்த வேலை நிறுத்தத்தை ஆதரித்து நடந்து வந்த நிறுத்தங்களும் தற்காலிகமாக வாபஸ் வாங்கப்பட்டிருக்கின்றன. துறைமுகத் தொழிலாளர்களுக்கு மாதச் சம்பளம் அளிப்பது பற்றி விசாரணை நடத்தி அறிக்கை சமர்ப்பிக்க நியமிக்கப்பட்டிருக்கும் இரு விசேஷக் கமிட்டிகளின் அறிக்கையைப் பார்ப்பதென்றும் அந்த அறிக்கை திருப்தியைத் தராவிட்டால் பிறகு மீண்டும் வேலை நிறுத்தத்தை ஆரம்பிப்பதென்றும் தொழிலாளர் யூனியன்கள் தீர்மானித்திருக்கின்றன. ஆனால் உண்மை வேறு. மூன்று வாரகாலமாகத் தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்துவந்த தொழிலாளர் யூனியன்கள் அரசாங்கம் அசைந்து கொடுக்குமென்று எதிர்பார்த்தன. ஆனால் அரசாங்கம் சற்றும் பணிந்து கொடுப்பதாயில்லை. தொழிலாளருக்கும் வேலை நிறுத்தத்தில் சலிப்பு ஏற்பட்டு விட்டது. வேலைக்குத் திரும்புவதைத் தவிர வேறு வழி அவர்களுக்கு இல்லை.

பிரதிவருடமும் இலங்கையில் சிறப்பாக நடக்கும் ஆடிவேல் திருவிழா இவ்வருடமும் வழக்கம்போல் நடைபெற்றது. வள்ளியம்மையை முருகப்பெருமான் மணந்து கொண்டதாகக் கூறும் கதிர்காம க்ஷேத்திரத்துக்கு ஆயிரமாயிரமாக இந்துக்களும் பௌத்தர்களும் சென்று வழிபட்டார்கள். கதிர்காமமென்பது இந்துக்களுக்கும் புனிதமான விதமாக இருப்பதைப் போலவே பௌத்தர்களுக்கும் விசேஷப் புனிதத்தன்மை வாய்ந்ததென்பது குறிப்பிடத் தக்கது.

கதிர்காமக் கடவுளுக்கு துறவை என்னும் இடத்தில் ஒரு கோவில் இருக்கிறது. இந்தக் கோவிலிலும் பிரதி வருடமும் உற்சவம் நடப்பது வழக்கம். சென்ற வருடம் பிரதம மந்திரி இந்த ஆலயத்துக்குச் சென்று காவடி யெடுத்தபோது பௌத்தர்களில் சிலர் பிரமாதமான எதிர்ப்பைக் கிளப்பினார்கள். பௌத்தத்தில் கதிர்காமக் கடவுளான முருகனுக்கு உண்மையில் இடமில்லையாதென்றும், பிரதமர் ஒரு பௌத்தராக இருந்தும் காவடியெடுத்தது பொருத்தமற்றது என்றும் கிளர்ச்சிகள் நடந்தன. இவ்வருடம் அந்த கோவிலில் உற்சவம் நடந்தபொழுது பிரதம மந்திரி திரு பண்டாரநாயகா மறுபடியும் கோவிலுக்குச் சென்று கதிர்காமக் கடவுளின் விக்கிரகத்தைத் தமது சிரமேற் சுமந்து கொண்டு ரதத்தில் கொண்டு போய் வைத்தார். அந்த வைபவத்தில் அவரது மனைவியாரும் மற்றும் பல மந்திரிகளும் கலந்து கொண்டனர். மனச்சாட்சியின்படி நடக்க வேண்டுமென்பதுதான் புத்தரின் போதனையென்றும், தமது மனச்சாட்சியின்படியே துறவை ஆலயத்துக்கு வந்து கதிர்காமக் கடவுளின் திருவிழாவில் கலந்து கொண்டதாயும் பிரதம மந்திரி கூறினார். கொழும்பில் முருகப் பெருமான் ஊர்வலத்திலும் கலந்து கொண்டு அவர் கோவில் மாலையணிந்துபிரசாதம்பெற்றுக்கொண்டார்.

திரு அ. வள்ளியப்பாவுக்கு நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகம் கொழும்பில் ஒரு வரவேற்பு உபசாரம் நடத்திய பொழுது, அந்தக் கூட்டத்தில் பேசிய பண்டிட் இரத்தினம் அகில உலகிலுமுள்ள தமிழ் பேசும் மக்கள் தேசிய எல்லைகளாலும் அரசியல் கொள்கைகளினாலும் சில சமயம் கடைப்பிடிக்கும் மதக்கோட்பாடுகளினாலும் பிரிந்திருந்த போதிலும் பேசும் மொழியும் பண்பாடுகளும் அவர்களை ஒரு சமுதாயமாக இணைத்திருக்கிறதென்றும் இந்த ஒற்றுமை அம்சத்தைப் பயன்படுத்தி அகில உலகத் தமிழர் மன்றம் ஒன்றை நிறுவி, தமிழ்ப் பணியாற்ற வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். இந்த ஸ்தாபனத்தை நிறுவத் தாய்த்திருநாடாகிய தமிழகத்திலுள்ள பெரியார்கள் தான் அக்கறை யெடுத்து ஆவன செய்ய வேண்டும். இவ்வாறு பண்டிட் கா. பொ. இரத்தினம் ஒரு மேலான யோசனையைக் கூறினார். திரு அ. வள்ளியப்பா பிறகு பேசிய பொழுது பண்டிட் இரத்தினத்தின் மேற்படி யோசனையைப் பாராட்டி விட்டு, சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கக் காரியதரிசி என்ற முறையில் இந்த யோசனையைத் தமிழக எழுத்தாளர்களுக்கு எடுத்துக் கூறுவதாகச் சொன்னார்.

—ரஜனி

உண்டு. முடிந்ததும் மக்கள் முன்போலவே அவர்களாகப் பிரிந்து வேலைக்குச் சென்று விடுவார்கள்.

''மாலையில் எல்லோரும் வழக்கம்போலப் பாட வகுப்புகளுக்குச் செல்லுவார்கள். அங்கே ரேடியோ 'மக்களின் தினசரி' (People's Daily) யிலிருந்து தலையங்களை அறிவித்துக்கொண்டிருக்கும். அது முடிந்தால் விவசாயத்திலும் தொழில் துறையிலும் உற்பத்திப் புள்ளி விவரங்களும், 'அமெரிக்க ஏகாதிபத்திய'த்தையும் 'பேராக் கோஷ்டி'யையும் ஒழித்துக் கட்ட என்ன நடவடிக்கை மேற்கொள்ளப் பட்டிருக்கிறது என்பதையும், எப்படிச் செஞ்சீன உற்பத்திப் பெருக்கில் இலக்கையும் மீறி விட்டது என்பதையும் பற்றியும் ஒலிபரப்பும்.''

இம்மாதிரியான ஒரு முறையை முன்பின் போலவோ சாவதானமாக நம் பாரதத்தில் எந்த அரசாங்கமும் புகுத்த முயலும் என்பதையே எண்ணவும் நினைக்க முடியவில்லை.

## ஜப்பான் அனுபவம்

ஜப்பான் தேசத்தில் தளபதி மக்ஆர்தருடைய ஆதரவில் நிலச் சீர்திருத்தம் ஆரம்பிக்கப் பட்டது. அதனுடைய லட்சியம் கிராமப்புறங்களில் ஜனநாயக முறை ஏற்படுத்துவது. பெரிய நிலச்சுவான்தார்களும் கிராமத்தை விட்டு வெளியே வசிக்கும் நிலச் சொந்தக்காரர்களும் அநேகமாக ஒழிக்கப் பட்டு அவர்களுடைய நிலவுடைமைகளெல்லாம் சிறிய விவசாயிகள் கைக்கு மாறின. இந்த மாற்றத்தின் நோக்கம் சிறிய விவசாயிகளை ஓரளவுக்கு வசதியுள்ள பெரிய நிலச்சுவான்தார்களாக ஆக்குவது. மண் வளத்தைப் பாதுகாக்கச் சிறு விவசாயிகளுக்கும் பிரத்தியேகமாக ஊக்கமளிப்பதும், விவசாய உற்பத்தியை அதிகரிக்கச் செய்வதும் இந்தச் சீர்திருத்தத்தின் நோக்கம் என்று தளபதி மக்ஆர்தர் விடுத்த அறிக்கையிலேயே எடுத்துக் கூறப்பட்டது. தனிப்பட்டவரின் நிலவுடைமை, உரிமை பற்றி இந்தச் சீர்திருத்தத்தில் சந்தேகமே எழவில்லை. சீர்திருத்தத்தின் சமூக ஜனநாயக லட்சியமே சமுதாய நிலையிலேயே நியாய உணர்ச்சியும், பொது நலத்தில் அவர்களுக்கு நீதி உணர்ச்சியும் பலாத்காரமற்ற அமைதியான முறையில் ஏற்பட வேண்டும் என்பதுதான் என்று சீர்திருத்தக்காரர்களே சொல்லி இருக்கின்றனர்.

தளபதி மக்ஆர்தரின் கருத்து எப்பாடு பட்டாவது ஜப்பானை வேகமாக அரிக்கும் கம்யூனிச அலையிலிருந்து காப்பாற்றி அதை ஒரு அரணாக அமைக்க வேண்டும் என்பது தான். இதன்படியேதான் அங்கே நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன. தொலைதூரத்தில் வசிக்கும் நிலச்சுவான்தார்களின் நிலத்தையும், குறிப்பிட்ட ஒரு உச்சவரம்புக்கு மேற்பட்ட உள்ள பெரிய நிலச்சுவான்தார்களின் அதிகப்படி நிலத்தையும், கட்டாயமாக அரசாங்கம் எடுத்துக் கொண்டது. நிலத்தை இழந்த சொந்தக்காரர்களுக்குச் சிறிது குறைந்த அளவில் நஷ்ட ஈடும் கொடுக்கப்பட்டது. இம்மாதிரி நாட்டிலுள்ள நிலத்தில் 35 சத வீதமும், மூன்றில் ஒரு பாகத்துக்கு அதிகமாகவே சர்க்காரால் வாங்கப்பட்டு உழவர்களுக்கும் பண்ணையாட்களுக்கும் புதிதாக வழங்கப்பட்டன.

இது நடந்தது 1953ம் ஆண்டில். இந்த மாதிரி ஜப்பான் முழுதும் சிறு நிலச்சுவான்தார்கள் பரவி விட்டனர். தனி நபரின் சொந்த மேற்பார்வையில் நாட்டிலுள்ள 90 சதவீத நிலத்தில் விவசாயம் நடைபெற்று வருகிறது. பண்ணையாட்கள்—நிலச்சுவான்தார் என்ற சச்சரவுகள் நாட்டிலிருந்து மறைந்து விட்டன. தொழிலாளி வர்க்க விளைவிட்டுக் கிளர்ச்சி நடத்தும் பொதுவுடைமைக்கும் வாய்ப்பில்லாமல் போய் விட்டது. நிலத்தை இழந்த பெரிய நிலச்சுவான்தார்களுக்குக் கொடுக்கப்பட்ட நஷ்டஈட்டுத்தொகை குறைவு என்று பரவலாக ஆட்சேபங்கள் இருந்தாலும், இந்தச் சீர்திருத்தம் பெரிய நிலச்சுவான்தார்கள் மீது துவேஷ மனப்பான்மையுடன் நடைபெறவில்லை என்பதை இங்கே உணர வேண்டும். அத்துடன் ஜப்பான் தொழில்வளர்ச்சி அடைந்த நாடு என்பதையும், தொழில் வளர்ச்சியும் முன்னேற்றத்தையும் ஒட்டி அதற்கு அனுசரணையாகவே விவசாய உற்பத்தி நிகழ்கிறது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## நிர்ப்பந்தம் கூடாது!

அயல்நாட்டினர்கள் பிரச்சினைகளைச் சமாளித்தாற் போன்று அதேமாதிரி பிரச்சினைகளைச் சமாளிக்க முயன்று கொண்டிருக்கும் நமக்கு அவர்களுடைய அனுபவங்கள் பெரிதும் பயனளிக்கும் என்பதில் சந்தேகமில்லை. இம்மாதிரி விஷயங்களைப் பற்றி விவாதிக்கும் போது, பிரெஞ்சு தேசத்து அறிஞர் போய்லோ (Boileau) வேடிக்கையாக, ஆனால் கருத்துச் செறிவுடன், சொல்லிய நீதியைக் கவனத்தில் கொள்ளுதல் நலம். ''இயற்கையின்மையைப் பலாத்காரமாகத் தலைவாயில் வழியே வெளியேற்றினாலும், அவள் சிற்றடங்கொண்டு இரண்டடித்த வேகத்துடன் பின்புற வாயில் வழியே உள்ளே நுழைந்துவிடுவாள்'' என்றார் அந்த ஆசிரியர். எவ்வளவு உண்மை! மேலும் தேசிய முன்னேற்றத்தை, தனி மனிதன் வெளிக் கட்டுப்பாடின்றி, எவ்வித நிர்ப்பந்தமுமின்றித் தானாகவே எந்த அளவுக்கு அளித்திருக்கிறான் என்பதைக் கொண்டே மதிப்பிட வேண்டும் என்ற உண்மையையும் மறந்து விடக் கூடாது.

நில உடைமைக்கு உச்சவரம்பு கட்டுவது பற்றியும், கூட்டுப் பண்ணைகளே நமது இறுதி லட்சியம் என்று ஓயாது அரசியல் தலைவர்கள் வலியுறுத்துவதையும் பார்த்தோம். ஒரு விஷயம் முக்கியமாகச் சொல்ல வேண்டும் என்று தோன்றுகிறது. அவசியமானதை மட்டும் முதலில் கவனித்து, அதற்காக வேண்டியதைச் செய்ய வேண்டும். உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டியதுதான் அவசியமென்றால் அதற்கு அதிகமான ரசாயன உரம், ஏரு போடுதல், மண் வளத்தைப் பாதுகாக்கத் தேவையான இடங்களில் படிக்கட்டுகள்போல் நிலத்தைச் சமன்படுத்துதல், அதிகமான நீர்ப்

சென்றும் முன்னேற்றம் அடைந்து விட்ட மாதிரி பிரமைதான் உண்டாகும். உண்மை முன்னேற்றத்தின் போலியைத்தான் காண லாம். ஆனால் அதன் மூலம் வெகு சீக்கிரத்தி லேயே, நாம் எல்லோரும் எதிர்பார்ப்பதற்குப் பல நாட்கள் முன்னதாகவே நமது கிராமிய விவசாய அமைப்பே சீரழிந்துபோய் எல்லாம் ஒரே குழப்பமான நிலைக்கு வந்துவிடும். கூட்டுறவுப் பண்ணை முறையை எதிர்த்துப் பேசுபவர்களை யெல்லாம் "பிற்போக்காளர் கள்," "சுயநலக்காரர்கள்" என்று கண்டனம் செய்து இதைப்பற்றி விவாதம் செய்வதையே தடை செய்துவிட்டு, உண்மையை மறைத்துக் கட்சிக் கட்டுப்பாட்டுப் பலத்தால் அரசியல் கருத்தினை ஒன்று போலவே உருவாக்கப் பிரசாரத்திலும், ஓயாத கோஷங்களிலும் ஈடுபட்டு, இப்போது நடந்து வருவதைப் போலவே இனிமேலும் தொடர்ந்து நடந்தால், மேலே சொன்ன குழப்ப நிலை ஏற்பட்டு விவசாய அமைப்பும் சீரழிந்து போகும் நிலை வரும்.

5. நாட்டில் அந்தத் துர்ப்பாக்கிய நிலைமை ஏற்பட்டு விட்டால், எல்லாப் பாகங்களிலிருந் தும் அவலக் குரல்கள் கேட்கத் தொடங்கும். செய்வது இன்னது என்று அறியாமல் திகைப் படைந்து தவிக்கும் தருணத்தில் ஏற்கனவே முழுமையான கருத்துடன் உருவாக்கப்பட் டுள்ள அரசியல்வாதிகள் கட்டாயக் கூட்டு முறைப் பண்ணைகளை உடனே ஏற்படுத்த வேண்டும் என்று கோஷிப்பார்கள். ஆரம்பம் முதல் கடைசிவரையில் அதிகாரிகளாலேயே நிர்வகித்து நடத்தப்பட வேண்டிய கூட்டுறவுப் பண்ணைதான் மிக அவசியம் என்று வலி யுறுத்துவார்கள். பண்ணையிலிருந்து விலகிக் கொள்ளப் பட்டாதார் அங்கத்தினர்களை அனுமதிக்கவே கூடாது என்று கூக்குரலிடு வார்கள். சோவியத் ரஷ்ய முறையாகிய சமுதாயப் பண்ணையின் (Collectivism) மற் றொரு தோற்றம்தான் இது. கூட்டுறவுப் பண்ணைகள் விவசாயிகளின் விருப்பத்தின் அடிப்படையில் ஆரம்பிக்கப்படும் என்பது சுத்தப் பொய் என்பது அப்போது விளங்கும்.

# ஆகாச வெடி!

சிம்லாவிலிருந்து திரும்பிய நேருவை நிரு பர்கள் அணுகியபோது, "உடல்நிலை சரி யில்லை, கேள்வி கேட்காதீர்கள்" என்றார்.

—புதுடெல்லிச் செய்தி

உடல்நிலை பற்றிக் கேள்வி போடாமல் விட்டார்களா?

•

"மேற்கு பாகிஸ்தானிலிருந்து ஆடுகளை அறவே ஒழித்துக் கட்டச் சர்க்கார் முன் வந்திருக்கிறது." —செய்தி

ஆடுகளைப்போல் தாடி வளர்த்துக் கொள் வோர்களுக்கு இது ஒரு எச்சரிக்கையா யிருக்கலாம்.

•

"பலகைகளை ஒட்டுவதற்கு ஒரு புதுமாதிரி பசையைக் கண்டுபிடித்திருக்கிறார் லண்டன் இஞ்ஜினீயர் ஒருவர்." —செய்தி

பதவியில் நீடித்து ஒட்டிக்கொள்ள அது பயன்படுமா என்று ஒரு மந்திரி கேட்டால் ஆச்சரியமில்லை.

•

"இன்று மறியலில் ஒரு வேடிக்கை; கூட்டத் தினர் வீசிய கற்களை ஏந்தி, போலீஸார் அவர்கள் மீதே வீசினர்!"

—திருவனந்தபுரம் செய்தி

போட்ட கற்களெல்லாம் திரும்பி வந்து விட்டதால் தங்கள் கட்சிக்கு நஷ்டம் ஏற்பட வில்லை என்று கூட்டத்தினர் பேசிக்கொண் டிருக்க வேண்டும்.

"தபால்காரர்களை நாய் கடிக்க வருவ தால், வீட்டுக்காரர்கள் இனி வாசலில் தபால் பெட்டிகளைப் பொருத்தும்படி சென்னை தபால் அதிகாரிகள் யோசனை கூறியுள் ளார்கள்." —செய்தி

தபால்காரர்களை எதிர்பார்த்துக் கொண் டிருந்த நாய்கள், இனி ஏமாற வேண்டிய துதான்!

•

"நரகத்துக்கு வேண்டுமானாலும் செல் வேனே தவிர, கேரள கம்யூனிஸ்டுகளுடன் சமரசம் பேச மாட்டேன்."

—மன்னத்து பத்மநாபன்

கேரளம் முற்றும் நரக வேதனையில் ஸ்ரீ மன்னத்து அங்கெல்லாம் ஏன் போக வேண்டும்?

•

"தூக்கத்திலிருந்த 23 பேர் காஷ்மீர் வெள்ளத்தில் இழுத்துச் செல்லப்பட்டனர்."

—செய்தி

விழித்தபோது, அவர்கள் துக்கவெள் ளத்தில் மூழ்கியிருக்க நேர்ந்திருக்கும்.

•

"கூச்சல் போட்டுக் கொய்யாப்பழத் தோட் டங்களிலிருந்து கிளிகளை விரட்ட கூலிக்கு ஆட்கள் நியமிக்கப்படுகிறார்கள்." —செய்தி

கூச்சல் போடாமலிருப்பவர்களைப் பழம் தின்று கொண்டிருப்பதாக நினைத்து விரட்ட, யாரை நியமித்தார்களோ?



பக்ஷிராஜா வின்

# மரகதம்

(கருங்குயில் குன்றத்துக் கொலை)

புரொட்யூஸர் & டைரக்டர்

S.M. ஸ்ரீராமுலு நாயுடு

விரைவில் வருகிறது...

தான். உணவருந்திய பிறகு வந்த காரியத்தை வினவினான்.

"கண்ணன் எங்களை நினைக்கின்றானா? என்னையும், யசோதையையும், தோழர்களையும், பசு மேய்க்கும் கோபர்களையும் கண்ணனே கதியென்று வாழும் மற்ற மக்களையும், ஆனினத்தையும், பிருந்தாவனத்தையும், கோவர்த்தன மலையையும் மறக்காதிருக்கின்றானா? ஒருதரமாவது திரும்ப வருவானா? அவன் திருமுகத்தை நாங்கள் காண்போமா? அவனை எண்ணும்போதே செயலற்று நின்று விடுகிறோம். எங்கள் மனம் அவனிடம் பாய்கிறது. அவன் விளையாடிய இடங்கள் மனத்திலே தோன்றுகின்றன" என்றான். இவ்வாறு கண்ணனை நினைத்துப் பேசியதுமே நந்தனுக்கு உள்ளத்தில் அன்பு வெள்ளம் பெருகி மேலே பேச நா எழவில்லை. இம்மொழியைக் கேட்ட யசோதையும் கண்ணீர் சொரிந்தாள்.

இவர்களுடைய ஆழ்ந்த அன்பைக் கண்டு உத்தவர் ஆனந்தம் அடைந்தார். "பிறந்த மாந்தருள் மேலோர் நீங்களே. கண்ணனை வளர்த்த வள்ளலன்றோ நீங்கள்! கண்ணன் கடவுளின் அவதாரம். நேராக வந்த நாராயணன். கண்ணன் வந்து உங்களைக் காண்பான். 'வருகிறேன்' என்றுரைத்ததைக் காப்பாற்றுவான், வருந்தாதீர்கள். ஆனால் கண்ணன் உங்களுக்கு மட்டும் மைந்தன் அல்ல. மைந்தனும் அவனே; தான் என்ற உட்பொருளும் அவனே; தாயும் தந்தையும் சகலமும் அவனே! அவனின்றி வேறொன்றும் எங்குமே இல்லை. மெய்ப்பொருள் என்பது கண்ணனே" என்று நந்தனுக்கும் யசோதைக்கும் ஆறுதல் கூறி உண்மையையும் விளக்கினார்.

இரவு தீர்ந்தது. அதிகாலையில் ஆயர் பாடிப் பெண்கள் துயிலெழுந்து தயிர் கடைய ஆரம்பித்தனர். அப்பொழுது அவர்களுடைய கைவளைகள் கிலுகிலுவென்று ஓசையிட்டன. குண்டலத்தின் ஒளியால் கன்னம் திகழ்ந்தது. மருங்கசையத் தயிர் கடையும் மங்கையருடைய அழகு மனத்தைக் கவர்ந்தது. அச்சமயம் அவர்கள் உயர் குரலில் கண்ணனைக் குறித்துப் பாடினார்கள். பொழுது புலர்ந்தது. நந்தனுடைய வீட்டுக்கு வெளியே ஒரு பொன் ரதம் நிற்பதைக் கண்ணுற்றனர். ஒருவரோடு ஒருவர் பேசலானார்கள். "ஒருவேளை அக்ரூரர் திரும்பி வந்திருக்கின்றனரோ? இறந்த கம்ஸனுக்கு நம்மையேபலி இடுவரோ?" என்றெல்லாம் கோபிகள் கூறிக் கொண்டிருக்கையில், உத்தவர் யமுனைக் கரையில் தமது காலைக்கடன்களை முடித்துக் கொண்டு நந்தன் வீட்டை அடைந்தார். செந்தாமரைக் கண் வாய்ந்து நெடுந்தோள் பொருந்தி, மஞ்சள் ஆடை உடுத்து அழகிய தோற்றத்துடன் விளங்கும் உத்தவரைக் கண்டதும் இவர் கண்ணனுடைய தூதர் என்று கோபிகள் தீர்மானம் செய்தார்கள். அவரை அணுகி வெட்கத்துடன் பின்வருமாறு வினவினார்கள்:

"உம்மைக் கண்ணனுடைய ஆள் என்று அறிவோம். தாய் தந்தையரை ஆனந்தப்படுத்தவே உம்மைக் கண்ணன் இங்கு அனுப்பியிருக்கிறான். இல்லையேல் பசு மேயும் கானகத்தைக் கண்ணன் எண்ணுவதேது? ஒருவருக்கும் பெற்றோரிடம் அன்பு இருப்பதில் ஆச்சரியம் இல்லை. சுற்றமில்லா மாதரோடு விளையும் ஆசை நிலைக்காது. வண்டுக்கு மலரிடம் வரும் தொடர்பெனக் கணப்பொழுது இருந்து மறைந்து விடும். விலைமாதர் எளியோரையும், குடிகள் திறமற்ற அரசனையும், மாணவர் கற்றபிறகு கற்பித்த ஆசிரியரையும், வேள்வி செய்யும் அந்தணர் கூலி பெற்ற பிறகு வேள்விக்கு யஜமானனையும், பறவைகள் பழமற்ற மரத்தையும், வழிப்போக்கர் அன்னம் அளித்த வீட்டினையும், விலங்குகள் தீப்பற்றிய கானகத்தையும், நாயகன் அனுபவித்த நாயகியையும் கைவிடுவது வழக்கமே."

இவ்வாறு கண்ணனைப் பிரிந்த துயரால் வெட்கம் விட்டுக் கதறும் ஆயர்மங்கையருடைய அன்பைக் கண்டு உத்தவர் வியந்தார். அச்சமயம் கோபிகள் கண்ணனுடைய லீலைகளை நினைந்துக் கண்ணீர் விட்டனர். இந்நிலையில் அங்கு ஒரு கருவண்டு வட்டமிட்டது. அதைப் பார்த்த ஒரு கோபி (இவளை ராதை என்று பெரியோர் உரைப்பர்) அவ்வண்டைக் கண்ணன் அனுப்பிய தூதன் என்று கருதி மனம் வருந்திப் பாடலுற்றாள்:

"தேனைப் பருகும் கருவண்டே! ஏமாற்றும் கண்ணனுக்குத் தகுந்த தோழனே! நகரத்து மாதரைத் தழுவிக் குங்குமம் படிந்த கண்ணனுடைய மலர் மாலையை நுகர்ந்து வெந்த முகத்தால் என் தாளைத் தொடாதே! காட்டில் வாழும் எங்களை அண்டி என்ன பயன்? அதரமென்ற அமுதை அளித்து விட்டு, அறிவிலிகளான எங்களைக் கண்ணன் கைவிட்டான். பூவிலிருந்து தேனை எடுத்துக் கொண்டு நீயும் பூவைக் கைவிடுவாய். எவ்விதம்தான் லட்சுமி தேவி அவனோடு வாழ்ந்து வருகின்றனளோ? அவனுடைய பேச்சிலே அவளும் மயங்கியிருக்க வேண்டும். ஆறு கால் படைத்த வண்டே! நீ இங்கு வந்து கண்ண

ளுடைய பெருமைகளைப் பாட வேண்டாம்; நாங்கள் அவைகளையெல்லாம் அறிவோம். அவைகளை மதுரை மாதரிடம் உரைப்பாய். அவன் புருவம் அசைந்தால் எவள்தான் அவனுக்கு அடிமை ஆக மாட்டாள்? லட்சுமியே அவன் தான் தாளினைத் தாங்கும்போது நாங்கள் யார்? இருப்பினும், 'புவி எங்கும் புகழ் பாடப்பட்டவன்' என்ற பெயர் எங்களைக் கைவிட்டவனுக்கும் பொருந்தியதென்றுரைப்பாய்.

"என் காலை அணுகாதே. மற்றவரை மயக்கும் மாயத்தைக் கண்ணனிடம் கற்றனையோ? முற்றிலும் துறந்த முருந்தனையே சரண் புகுந்து எம்மையே கைவிட்ட மாயனிடம் என்ன சமாதானம் செய்ய முடியும்?

"ராமனென்று வந்து மறைவிலே வாலியை வதைத்தான். ஒரு பெண்ணின் மூக்கை அறுத்தான். பூசையிட்ட பலி மன்னனைக் கட்டினான். போதும், இம் மோசக்காரக் கள்வனுடன் நாம்கொண்ட நட்பு. ஆயினும், என்ன செய்வேன்! கண்ணனின் கதை என்ற செல்வத்தை விடவும் முடியவில்லையே! வேடனைப் பின்பற்றிய பெண் மானின் கதியை அடைந்தோம். கண்ணனின் தூதனே! எம்மை எவ்விதம் அவனிடம் அழைத்துச் செல்வாய்? எப்பொழுது ஆயர்பாடிக்குத் திரும்புவான்?" என்று புலம்பினள்.

இந்த அன்பை ஆமோதித்துக் களிப்புற்ற உத்தவர் பெண்களுக்கு ஆறுதல் உரைத்தார். "கோபிகளே! வாசுதேவனிடம் மனத்தை இழந்த உங்களுக்கு இனிமேல் உலகில் அடைய வேண்டியது ஒன்றும் இல்லை. கண்ணனைப் பிரிந்த துயரால் உங்களுக்கு எங்கு நோக்கினும் கண்ணனே தென்படுகிறான். இந்த அன்பை நேரில் கண்ட நானே பாக்கியசாலி. புண்ணியவதிகளே! கண்ணன் என்னிடம் சொன்னதைக் கேளுங்கள். கண்ணன் சொன்னதாவது: அனைவர் உள்ளத்திலும் நானென்று இருக்கும் என்னை விட்டு நீங்கள் பிரிந்திருப்பது என்பது முடியாது. பஞ்சபூதங்கள் எங்கும் இருப்பது போல் நானும் எங்கும் இருக்கிறேன். என்னில் நானே படைப்பதும் பாலனம்செய்வதும் அழிவதும் என் மாயையால் செய்கிறேன். நான் என்ற ஆத்மா மாயையைத் தாண்டி மாறுது நிற்கும். என்னை எண்ணி என்னிடம் நீங்கள் மனத்தை நிலைநிறுத்த வேண்டும் என்றே நான் உங்களைவிட்டு அகன்றேன். பிரிந்திருக்கையில் மங்கையர் மனம் நாயகனை இடைவிடாது நாடுமன்றோ? என்னைத் தாமதமின்றி அடைவீர்கள்."

கண்ணனின் வாக்கை உத்தவர் மூலம் செவியுற்ற கோபிகள் மூளவு களிப்புற்றனர். "கம்சன் இறந்தான். கண்ணன் சுற்றத்தாரோடு வாழ்ந்து வருகிறான். அதில் எங்களுக்குத் திருப்தியே" என்றாள் ஒரு கோபி. "அன்று நாங்கள் அன்புடன் அழைத்த கண்ணன் இன்று நகரத்து மங்கையரை மயக்குகின்றனனோ?" என்று கேட்டாள் ஒருத்தி.

"நிலவு நிறைந்த இரவிலே நறுமணம் வீசும் யமுனைக் கரையில் எங்களுடன் ராஸக்ரீடை செய்ததை எண்ணுகின்றனனோ?" என்றாள் ஒரு கோபி. "எல்லாம் நிறைந்த கண்ணனுக்கு நாம் எதற்கு? அரசிளங் குமரிகள்தான் எதற்கு?" என்றாள் ஒரு பெண். "ஆசையற்றிருப்பதே ஆனந்தத்துக்கு வழி என்று நாங்கள் அறிவோம். ஆயினும் உத்தவரே! ஆறும், மலையும், கானகத்து நிலவும், பசுவும், குழலோசையும் எங்கள் மனத்தில் திரும்பத் திரும்பக் கண்ணனின் நினைவை ஊட்டுகின்றன. எவ்விதம் கண்ணனை மறப்போம்?" என்று எல்லோருமே முறையிட்டனர்.

இவ்விதம் தங்கள் சிந்தனைகளை வெளியிட்ட பிறகு, கோபிகள் உத்தவருக்குத் தகுந்த உபசாரம் செய்தார்கள். அவர்களுக்கு ஆறுதல் அளிக்க வேண்டியே அவர் சில மாதங்கள் ஆயர்பாடியில் தங்கினார். கண்ணனைப் பற்றிப் பேசியும் கண்ணன் விளையாடிய இடங்களைக் கண்ணுற்றும் உத்தவர் அங்கு மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார். கோபிகளுடைய பக்தியை வாய்விட்டுப் புகழ்ந்தார். ஆயர்பாடிப் பெண்களின் கால் புழுதியே புனிதம் தரும் என்று வணங்கினார். உத்தவர் மதுரைக்குத் திரும்பும் நாள் வந்தது. எல்லோரிடமும் ஒருங்கே விடைபெற்றுக் கொண்டார். மதுரையை அடைந்து கண்ணனிடம் நேரே சென்று நான் வணங்கி நடந்ததை எடுத்துரைத்தார்.

சந்தனம் கொடுத்த மாதிடம் தான் கம்சனைக் கொன்ற பிறகு வருவதாக வாக்களித்திருந்தானன்றோ? அதை நிறைவேற்ற வேண்டிக் கண்ணன் அவள் வீட்டை அடைந்து அவளுடன் தங்கி விட்டுத் திரும்பினான்.

பிறகு உத்தவரோடும் பலராமனோடும் கண்ணன் அக்ரூரரைப் பெருமைப் படுத்த அவர் இல்லத்துக்குச் சென்றான். கண்ணனுடைய தாள்களை அலம்பி அந்த நீரை அக்ரூரர் தம் தலையில் தெளித்துக் கொண்டார். பணிவுடன் இருவரையும் புகழ்ந்தார். கண்ணன் அவரை அஸ்தினபுரம் சென்று குந்தியும் அவள் மைந்தரும் துரியோதனன் வசப்பட்டு எவ்வாறு காலம் கழிக்கின்றனர் என்பதை அறிந்து வர ஏவினான்.

இந்த வண்ணப் புறாக்களின்
நிறம் வெண்மை...
இந்தத் துணிகளின்
நிறமும் அதுவே...










# மேட்டூர் மல்கள் & லாங்கிளாத்

தயாரிப்பவர்கள்:
மேட்டூர் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், மேட்டூர் அணை R. S.—சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்டுகள்:
**W. A. பியர்ட்ஸெல் & கம்பெனி (பிரைவேட்) லிமிடெட், மதராஸ்.1**

Lakmé



டால்கம் பௌடர்



ஓ டி கோலான்



லிப்ஸ்டிக்



டஸ்டிங் பௌடர்

பேஸ் பௌடர்



Lakmé

லக்மே

அழகின் அலங்காரத்திற்கென
ப்ரஞ்சு முறையிலிருந்து
தயாரிக்கப்பட்ட சாதனங்கள்

Lakmé லக்மே ஒருடாடா தயாரிப்பு

# வேங்கையின் மைந்தன்

அகிலன்

ஒன்பதாம் அத்தியாயம்

## வாணிகம் வளர்த்த மண்; வீரம் விளைத்த மண்!

**ம**னிதர்கள் தங்கள் மன வலிமையையும் உடல் வலிமையையும் நம்பி வாழ்ந்த காலம் அது. திரை கடலோடித் திரவியம் சேர்ப்பதென்பது, தொலை தூரத்து நாடுகளின் போர்க்களங்களுக்குச் சென்று மீள்வதைப் போன்றது. கிழக்குக் கடலில் கிழக்கு நோக்கிப் புறப்பட்டால், எதிர்க்கரை காண்பதற்கு, வாரங்களல்ல, மாதங்கள் காத்திருக்க வேண்டும். **மாநக்கவாரம் தீவுகளில்** சில தினங்கள் தங்கி மீண்டும் கிளம்பினால், ஒரே நீலக்கடல், நீலவானம், திரும்பிய பக்கமெல்லாம் நீல நிறந்தான்.

சார்ந்த காற்று வீசத் தொடங்கும் காலங்களில்தான் பாய்மரங்களை அவிழ்த்துக்கொண்டு துடுப்புப் போடுவார்கள். சார்ந்த காற்று எதிர்க்காற்றாக மாறாதிருக்க வேண்டும்; கடல் அலைகள் மலைச் சிகரங்களின் உயரத்துக்கு எழும்பாதிருக்க வேண்டும். இன்னும், மறைந்து மோதும் கடற் பாறைகள், முதுகால் கலம் கவிழ்க்கும் திமிங்கலங்கள், துள்ளித் தாக்கும் சுறா மீன்கள், நள்ளிரவில் கொள்ளைகொள்ளும் கடற் கள்ளர்கள்—இவ்வளவு தொல்லைகளையும் கடந்து செல்ல வேண்டும். கடந்து திரும்ப வேண்டும்.—இதில் நம் தமிழ் நாட்டு வணிகர்கள் என்றுமே சளைத்தவர்களல்லர்.

ஐயவிர நாச்சியப்பரைச் சேர்ந்தவர்கள் கடல் வாணிகத்திலும் தேர்ந்தவர்கள்; தரை வாணிகத்திலும் தேர்ந்தவர்கள். அவர்களுக்கென்று நாடுகள் தோறும் தனிக் குடியிருப்புகள், நகரங்கள்தோறும் விடுதிகள், சொந்தக் கட்டுக் காவல் அனைத்தும் உண்டு.

**தி**ருவெண்ணெயில் நகரிலிருந்து நாச்சியப்பர் வந்துவிட்டார் என்றும் செய்தியை மாமன்னரிடம் வந்து கூறினான் இளங்கோவேள். வெளிநாடுகளிலிருந்து கொண்டுவந்த வெகுமதிப் பொருள்களுடன் அவர் விருந்தினர் மாளிகையில் வந்து இறங்கியிருப்பதைத் தெரிவித்தான். அவருடைய வரவுக்

காகவே அவரை அரண்மனை வாயிலில் நிறுத்தியிருந்தார் சக்கரவர்த்தி.

"வெகுமதிப் பொருள்கள் மாளிகையிலேயே இருக்கட்டும். அவரைத் தனியாக அழைத்துக்கொண்டு நீயும் வந்து சேர்."

வணிகர் தலைவரை வரவேற்பதற்கு மாமன்னர் காட்டிய உற்சாகத்தைக் கண்டவுடன் சுற்றியிருந்தவர்கள் வியப்பெய்தினார்கள். "மதுரையில் ஒரு புதுமாளிகையை ஏன் எழுப்பச் சொல்கிறார் சக்கரவர்த்தி?" என்ற கேள்வியால் அவர்களிடம் சற்று முன்பு எழும்பிய பரபரப்பு இப்போது அடங்கிவிட்டது. அவர்களுடைய கவனத்தை நாச்சியப்பர் பக்கமாகத் திருப்பிய சக்கரவர்த்தி, "தனவீர நாச்சியப்பரை உங்களுக்கு முன்னமேயே தெரியும். நமக்கு அவருடைய ஒத்துழைப்பும் இப்போது அவசியமாக இருக்கிறது. அதனால் அழைத்திருக்கிறேன்" என்றார்.





உள்வாயிலில் நுழைந்து கொண்டே "வணக்கம் பேரரசே!" என்று கரம் குப்பிவிட்டு, மற்றவர்களையும் வணங்கினார் நாச்சியப்பர்.

"வாருங்கள்!" என்று ஓர் ஆசனத்தைச் சுட்டிக் காட்டினார் மாமன்னர். பிறகு மற்றவர்களிடம் திரும்பி, "காவியத் தலைவன் கோவலனின் வழிவந்தவர்கள் இவர்கள். பட்டினத்தடிகளைப் பெற்றெடுத்துச் சைவத்தையும் தமிழையும் வளர்த்திருக்கிறது இவர்களது பெருங்குடி!" என்று புகழ்ந்துரைத்தார்.

"இவற்றையெல்லாம் விட, தாங்கள் வாழும் காலத்தில் நாங்களும் வாணிகம் செய்து வளர்கிறோம் என்பதே எங்களுக்குப் பெருமை!" என்றார் நாச்சியப்பர்.

வாணிக நிலைமையைப்பற்றி ஓரிருவார்த்தைகள் கேட்டுவிட்டு, "ஒரு முக்கியமான உதவி கோருவதற்காகவே உங்களை இன்று வரவழைத்தோம்" என்றார் இராஜேந்திரர்.

"உதவியா! உதவி என்பது என் தகுதிக்கு மேற்பட்ட சொல். சக்கரவர்த்திகளின் கட்டளை எதுவோ, நிறைவேற்றக் காத்திருக்கிறேன்."

"வெளி நாடுகளுக்குச் சென்றுள்ள மரக்கலங்களைத் தவிர, இப்போது உங்களிடம் உள்ள மரக்கலங்களில், எவ்வளவு கலங்களை நீங்கள் சோழப் பேரரசுக்குக் கொடுக்க முடியுமோ அவ்வளவையும் கொடுத்து உதவவேண்டும். நான்கு மாதங்களில் திருப்பிக்கொடுத்துவிடுகிறேன்."

"கடல் மல்லை, நாகை, விழிஞம், காந்தளூர் ஆகிய எல்லா நகரங்களிலுமாக இப்போது முப்பது பெருங்கலங்களும், பத்தும் பன்னிரண்டு சிறு கலங்களும் இருக்கின்றன. அவ்வளவையும் நாங்கள் எந்தத் துறைக்கு அனுப்பும்படி கட்டளையிடுகிறீர்களோ, அங்கு அனுப்பி வைக்கிறேன்" என்று தயங்காது பதிலளித்தார் வணிகர் தலைவர்.

"நாகைப்பட்டினத்துக்கு அனுப்புங்கள்" என்று கூறினார் மாமன்னர். "இந்த இடைக்காலத்தில் அதனால் உங்களுக்கு வருவாய்க் குறைவு ஏற்படும். அதற்கு ஈடாக நம்முடைய தன பண்டாரத்திலிருந்து உங்களுக்குப் பொன்

வழங்கச் செய்கிறேன். தயங்காமல் பெற்றுக்கொள்ள வேண்டும்."

"சக்ரவர்த்திகள் என்னை மன்னித்தருள வேண்டும்!"

"ஏன்?"

"பொன் வழங்குவதாகத் தாங்கள் கூறுவது தங்கள் பொன்னான மனத்தைக் காட்டுகிறது. நாங்கள் அதை ஏற்றுக் கொள்வது முறையாகுமா? நான்கு மாதங்களுக்கென்ன, நான்கு ஆண்டுகளுக்கு எங்கள் கலங்கள் பேரரசின் கலங்களாகவே இயங்கட்டும். அது எங்கள் பாக்கியம்! - இறைவனின் பேரருளும் தங்கள் அன்புமாகச் சேர்ந்து நான்கு தலைமுறைகளுக்கான பொற் குவியலாய் எங்களிடம் நிறைந்திருக்கிறது."

"எதையும் கணக்கோடும் முறையோடும் செய்பவர்கள் என்ற பெயர் உங்களுக்கு உண்டு. நூற்றுவரான உங்கள் கூட்டத்தாரில் ஒருவர் மனமும் இதனால் நோகக் கூடாது. மற்ற பெரிய தனக்காரர்களிடமும் கலந்து ஆலோசனை செய்யுங்கள். நாட்டின் வாணிகமும் இதனால் சிறுமைப்படக் கூடாது."

"ஒருபோதும் இதனால் வாணிகம் தடைப்பட்டு விடாது" என்றார் நாச்சியப்பர். "மேலை நாடுகளிலிருந்து திரும்ப வேண்டிய கலங்கள் வேறு இருக்கின்றன. மலையம், கடாரம் முதலிய நாடுகளின் கப்பல்களையும் நாங்கள் பயன்படுத்திக் கொள்வோம்.



—வணிகர் கூட்டமே இதனால் பெருமையுறும் சக்கரவர்த்திகளே!"

பொருள் கொடுக்காமல் கலங்களைப் பெற்றுக்கொள்வதில் சக்கரவர்த்திக்கு விருப்பமில்லை. அப்படிப் பெற்றுக் கொண்டால் அது அதிகாரத்தினால் பெற்றுக் கொண்டதற்கு ஒப்பாகும் எனக் கருதினார்.

வணிகர் தலைவர் ஒருவழியாக விட்டுக் கொடுக்க முன்வந்தார்.

"சக்கரவர்த்திகளின் கருத்தும் எனக்குப் புரிகிறது. அப்படியானால் ஒரேஒரு பொற்கழஞ்சை நாங்கள் கடனாகப் பெற்றுக் கொள்கிறோம்."

"ஒரு பொற் கழஞ்சா!"

"ஒரு கோடிப் பொன்னுக்கு அது ஒப்பாகும்" என்றார் ஜெயவீர நாச்சியப்பர்.

மன்னரும் மகிழ்ச்சியுற்றார். "ஜயவீரரே! வணிகரின் திறமை பெரும் பொருள் கொள்வதில்தான் வழக்கமாக வெளிப்படும். பொருள் வழங்குவதிலும் நீங்கள் திறமைசாலிகள். இருக்கட்டும். போர்க் கலங்களுடன் துணைக் கலங்களாக அவற்றில் உணவுப் பொருள்களையும் போர்க் கருவிகளையும் ஏற்றிச் செல்ல விரும்புகிறோம். கலங்களை இயக்கும் மீகாமன்களையும், துடுப்பினரையும் உடன் அனுப்புங்கள். மேலும் கலங்களைக் காப்பதற்கு **எறி வீரர்களும், ஒலி வீரர்களும்** தங்களிடம் இருப்பார்களே?"

"வேல் எறியும் மூந்நூறு எறி வீரர்களும், வில் வளைக்கும் நானூறு ஒலி வீரர்களும் இப்போது இருக்கிறார்கள். துடுப்பு வலிப்பவர்கள் கூடச் சமயம் நேரும்போது வேல் வீசக் கூடியவர்கள் தாம். அனைவரையும் கலங்களுடன் அனுப்பி வைக்கிறேன்."

மாமன்னர் தமக்குப் பின்புறம் அமர்ந்திருந்த திருமந்திர ஓலை நாயகத்திடம் திரும்பி, "ஓலை எழுதிக் கொடுத்து, படைக் கணக்கரிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்" என்று பணித்தார்.

பொன் தட்டில் பழம், பூ, தாம்பூலம் முதலிய மங்கலப் பொருள்கள் வந்தன. அதில் ஒரு பொற்கழஞ்சு வைத்து மாமன்னர் வணிக மன்னரிடம் கொடுத்தார். எழுந்து நின்று இரு கரங்களையும் ஏந்திப் பெற்றுக்கொண்ட நாச்சியப்பர், கழஞ்சை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு, அதைத் தனியே பத்திரப்படுத்தி வைத்தார்.

அடுத்தாற்போல் வணிகரின் ஆட்கள் வெளிநாட்டரசர்கள் அளித்த பெரு மதிப் பொருள்களை அங்கே கொண்டு வந்து வைத்தார்கள். வண்ண வண்ணப் பொம்மைகள், சின்னஞ் சிறு சிற்பங்கள், தங்கத்திலும் தந்தத்திலும் இழைத்த புத்தர் பிரானின் சிலை உருவங்கள் முதலியவை அவற்றில் இருந்தன. நவரத்தினங்கள் பதித்த பொன்னாபரணங்களுக்கும் குறைவில்லை. கடாரத்தரசர் சங்கிராம விஜயோத்துங்க வர்மனும் மற்ற அரசர்களும் கொடுத்தனுப்பியவை எனக் கூறினார் நாச்சியப்பர்.

ஆலோசனை முடிந்து விட்டதால், அங்கு குழுமியிருந்தவர்கள் அனைவரும் அவற்றை வியப்போடு பார்வையிட்டனர். இராஜேந்திரரும் கீழை நாடுகளின் கலை நுட்பத்தைப் பாராட்டினார். பிறகு தமது திருமந்திர ஓலை நாயகத்திடம் அவற்றை ஒப்புவித்து, "ஆபரணங்களைப் பெரிய உடையார் திருக் கோயிலுக்கும் பிறவற்றை நகரத்தின் கலைக்கூடத்துக்குமாகப் பிரித்துக் கொடுத்துவிடுங்கள்" என்று கூறினார்.

தமக்கென எதையும் எடுத்துக்கொள்ளாத அவரது பெரும் போக்கு வணிகர் தலைவரைப் பெரு வியப்பில் ஆழ்த்தியது.

சபை கலைந்து எல்லோரும் வெளியே வந்தபோது இராஜேந்திரர் நாச்சியப்பரை அருகில் அழைத்து, "நாளைக்கு அதிகாரிகளின் பொதுச் சபை கூடுகிறது; அதில் கலந்து கொண்ட பிறகு நீங்கள் பிற்பகலில் ஊருக்குப் புறப்படலாம்" என்றார். சபை முடிந்தவுடன் அவரிடம் தனிமையில் சில விஷயங்கள் பேச வேண்டுமெனத் தெரிவித்தார்.

மறுநாள் சித்திரா பௌர்ணமி.

சோழப் பேரரசின் உறுதிமிக்க தூண்களான இருக்குவேளிர், பழுவேட்டரையர், வல்லவரையர், சம்புவரையர், பல்லவரையர், முனையரையர், முத்தரையர், ராஜாளியார், பெருங்கொண்டார், படையாட்சியார் முதலிய பெருங்குடித் தோன்றிய அதிகாரிகள் அரண்மனைப் பொது மண்டபத்தை அலங்கரித்திருந்தனர். இரேக்க நாட்டுக் கருங்கற் சிலைகள் தங்களது வலிவும் வனப்பும் தோன்ற அங்கே கொலுவீற்றிருப்பது போல் தோன்றியது. வேல் தாங்கிய வீரர்கள் சபை மண்டபத்துக் கெதிரே வழி நெடுகிலும் கம்பீரமாக நின்று, வரும் கூட்டத்தினரில் வரக்கூடாதவர்கள் யாரும் நுழைந்து விடாதவாறு கண்காணித்துக் கொண்டிருந்தனர்.

வாழ்த்தொலி வானத்தைக் கிடுகிடுக்க வைக்க, சோழப் பேரரசின் சக்கரவர்த்தியும் உடன் கூட்டம் புடைசூழ அரசவைக்குள் அடி எடுத்து வைத்தார். மேல் மாடத்திலிருந்து வண்ணப் பெண்கள் மலர்மாரி பொழிந்து இனிய மணத்தை எழுப்பினர். கதிரவனின் காலைப் பொன்னொளி தேங்கும் முகமண்டபம்,

# GOOD JOBS WITH GOVT HELP

சென்னை, திருச்சி, மதுரை மற்றும் விஜயவாடாவில் சர்க்கார் உதவி பெற்ற தொழில்களில் வேலை பார்த்து மாதம் ரூ. 100 சம்பாதிக்கலாம். நாளடைவில் மாதம் ரூ. 200க்கு மேல் சம்பாதிக்கலாம். 3 மாதங்கள் தொழிற் பயிற்சி. பப்ளிக் பரீட்சை ஏதுமில்லை. எஸ். எஸ். எல். ஸி. தேறியவர்களும் தவறியவர்களும் சேரலாம். பெண்களும் சேரத் தகுதியுடையவரே. உத்யோகத்திற்கு உத்திரவாதமுண்டு. இந்தப் பயிற்சியும் உத்தியோகமும் சேர்ந்த திட்டத்துக்கு சர்க்கார் உதவி கிடைக்கிறது. சென்னை, மதுரை மற்றும் விஜயவாடாவில் பயிற்சி பெறலாம். சர்க்கார் ஆபீஸ் குமாஸ்தாக்கள், உபாத்தியாயர்களை விட அதிகம் சம்பாதிக்கும் வாய்ப்பு இது.

**THE WORK OF THIS COLLEGE IS HIGHLY APPRECIATED BY MINISTERS & CHIEF ENGINEERS**

பிராஸ்பெக்டஸ் மற்றும் விண்ணப்ப தாளுக்குமின் விலை ரூபாய் ஒன்றை நேரிலோ மணியார்டர் மூலமோ செலுத்தலாம். M.O. கூப்பனில் உங்கள் பெயர், விலாசத்தை அச்செழுத்தில் எழுதுக. பிராஸ்பெக்டஸ் ஆங்கிலம், தமிழ், தெலுங்கு இவற்றில் எந்த பாஷையில் தேவை என்றும் குறிப்பிடவும். விண்ணப்பிக்குமிடம்:

**பிரின்ஸ்பால், மதராஸ் காலேஜ் ஆப் இன்ஜினீயரிங்**

தபால் பெட்டி நெ. 2797

97, சுவாமி நாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2

---



புத்தம் புதிய நறுமணம் நிறைந்த **டீரோஸ்** டாய்லெட்.

சோப்பைக் கொண்டு உங்கள் மேனியை

அழகுடனும் ஆரோக்கியத்துடனும்

மிளிரச் செய்யுங்கள்.

டீரோஸ் டாய்லெட் சோப்பில்

குளோரோபில் சேர்க்கப்பட்டிருக்கிறது.




பாம்பே சோப் பாக்டரியின்

தயாரிப்பு

PSBSF—1/59

விநியோகஸ்தர்கள். மெஸர்ஸ் ஏ. வி. தாமஸ் & கோ., (இந்தியா) லிமிடெட்
2/21, முதல் லேன் பீச், சென்னை-1

மெஸர்ஸ் ஏ. வி. தாமஸ் & கோ., லிமிடெட், கொச்சின்-3



இந்தியாவில் ஏராளமான

# சீட்டுக் கட்டுகள்

தயாரிப்பாளர்கள். அனைவருக்கும் ஏற்ற பற்பல ரகங்கள் வசீகரமான அனேகவித டிசைன்களில் கிடைக்கும்

விற்பனை விவரங்களுக்கு எழுதவும்

**THE POPULAR FINE ART LITHO WORKS, Tardeo Road, BOMBAY-7**

ஏஜண்டுகள்: வி. சி. ராமலிங்கம் அண்டு சன்ஸ், 2/422, தங்கசாலைத் தெரு, சென்னை-1

---

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(நிறுவியது)

"வீணு விஹார்," 17-A, ஸெயான் - மாதுங்கா எஸ்டேட்

(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

பம்பாய் - 22

தந்தி: 'GROW RICH'

POST BAG No. 6759

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1959 ஆகஸ்ட் மாத ஸீரீஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 6-8-59 ... முதல் ஏலத் தேதி 9-8-59

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | H | ரூ. 15/- | ரூ. 375/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- | | | |

## நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 6-8-59 ... முதல் ஏலத் தேதி 9-8-59

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறைந்த தள்ளுபடி |
|---|---|---|---|
| A | ரூ. 100/- | ரூ. 5,000 | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500 | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000 | ரூ. 100/- |

விவரம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போஸ்டர் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை; மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

[illegible] 3, [illegible] தெரு, [illegible] 414, [illegible]
கிளைகள்: [illegible] B-5, [illegible] III [illegible] 672, புது டெல்லி-1 ● 10197, [illegible] புது டெல்லி-5 ● 158, [illegible] புது டெல்லி-3.

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

வீறுகொண்ட வேழத்தின் நடையழகு. நெடிதுயர்ந்த உருவத்தின் பரந்த மார்பகம் இவற்றைக் கண்ணுற்ற அதிகாரிகள் தங்கள் இமைப்பை மறந்து விட்டனர். செக்கச் சிவந்த செந்தாமரை மொட்டுக்களா கண்கள்? பளபளக்கும் கருவிழிகள் பாதாளக்குகைவாயில்களா?

சபையினருக்கு வணக்கம் செலுத்தி விட்டு அரியாசனத்தில் அமர்ந்த மாமன்னர் சுற்றிலும் குழுமியிருந்தவர்களை ஒருமுறை வட்டமிட்டு நோக்கினார். ஆயிரக்கணக்கான அதிகாரிகளையும் தனித்தனியே அவர் உற்று நோக்குவது போலிருந்தது அந்தப் பார்வை.

பிறகு செங்கோலும் கரமுமாக எழுந்து நின்று தமது பேருரையைத் தொடங்கலானார் :—

"தமிழ்ப் பெருமக்களின் அன்புக்குரிய தலைவர்களே! உங்கள் அனைவரையும் இங்கு ஒன்றுபடக் காண்பது, இந்த நாட்டிலுள்ள பெருந்திரளான மக்கள் யாவரையும் சேர்த்துக் காண்பது போன்ற மகிழ்ச்சியைத் தருகிறது. எத்தனையோ காத தூரங்களிலிருந்தெல்லாம் வந்து குழுமியிருக்கிறீர்கள். இங்கு நான் தெய்வப்புலவர் திருவள்ளுவரின் இரண்டே இரண்டு குறட்பாக்களை மட்டும் உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். குறள் கூறும் செய்தியை, நான் கூறிய செய்தியாகவும் ஏற்றுக்கொண்டு இந்த நாடு முழுதும் பரப்புங்கள்."

மாமன்னர் தமது செங்கோலை உயர்த்திக் காட்டி முழங்கினார் : -

**"வான் நோக்கி வாழும்**
**உலகெல்லாம்; மன்னவன்**
**கோல்நோக்கி வாழும் குடி.**

"இந்தச் செங்கோல் என் கரத்தில் மட்டும் இருப்பதாக நினைக்காதீர்கள். இங்கு கூடியுள்ள ஒவ்வொருவர் உள்ளத்திலும் இது வேரூன்றி நிற்கவேண்டும். நாம் செய்யும் செயல் ஒவ்வொன்றையும் இறைவன் கண்காணித்துக்கொண்டிருக்கிறான் என்பதை நீங்கள் உணர்ந்து கொண்டால் போதும்.

"வான் மழை பொய்யாத நாடு இது. அதைத் தேக்கிவைத்து இமயத்தைப் போன்ற செந்நெற் கதிர் குவிப்போம். இன்னும், அன்பை வளர்க்க அருங் கலைகளை அளவின்றிப் பெருக்குவோம். அறத்தை வளர்க்கப் பெருங் கோயில்கள் எழுப்புவோம்.

"இவ்வளவு ஆக்கப் பணிகளையும் நாம் செய்ய வேண்டுமானால், நம்மை அழிக்கக் காத்துக்கொண்டிருப்பவர்களை நாம் வாளா விடக்கூடாது. பேரரசுக்குள்ளே



பம்பாய், மாதுங்கா போதர் கல்லூரி ஹாலில் குமாரிகள் ரீனு, ஜூலியின் நடனம் பாரதீய சங்கீதக் கலைச் சங்கத்தின் ஆதரவில் விமரிசையாக நடைபெற்றது.

யும் வெளியேயும் சூழ்ந்து நிற்கும் பகைப் படலம் நாளுக்குநாள் நம்மை அச்சுறுத்திக்கொண்டே வருகிறது. உட்பகையையும் வெளிப் பகையையும் களையும் நாள் தொடங்கி விட்டது. இனி நாம் களைப்படைந்தோ, உயிர் துறந்தோ கீழே விழும் வரையில், இந்தக் களை யெடுக்கும் வேலை நிற்கப் போவதில்லை.

**"கொலையிற் கொடியாரை வேந்து**
**ஒறுத்தல், பைங்கூழ்**
**களைகட்டதனொடு நேர்"**

மாமன்னரின் முகம் உறுதியால் சிலையாகிவிட்டது; சினத்தால் செம்பொன்னாகியது. வீர வேங்கையின் வெற்றித் திருமகன் சிம்ம கர்ஜனை செய்யலானார் :

"பயிர் விளைய வேண்டுமானால் களை பிடுங்கத்தான் வேண்டும்! தமிழ்க் குலம் வாழவேண்டுமானால் அதை அழிக்கக் காத்திருப்பவரின் ஆணவத்தை நாம் அடக்கித்தான் தீரவேண்டும்! இனி நம் வாழ்வெல்லாம் ஒரே போராட்டந்தான்! தமிழ்க்குலம் தரணியில் வாழ்ந்த சுவடே தெரியாமல் அழிக்கக் காத்திருக்கும் பகைவர்களுக்கு இனிக் கெட்ட காலம் தொடங்கிவிட்டது.

"இனி சோழவளநாட்டின் ஒவ்வொரு வீடுமே இருவகைப் பாசறைகள்; ஒவ்வொரு வீரனும் இரண்டு படை வீரர்கள்! ஒரு படை ஆக்கப்படை; கிணறு தோண்டி, குளம் கட்டி, ஏரி வெட்டி, வரப்புயர்த்தி அது பயிர் வளர்க்கும். மற்றொரு படை அழிவுப் படை. நம்மை அழிக்கவரும் தீமைகளை அழிக்கும் படை! - நம் வாழ்வே இனிப் போராட்டமென்பதையும், போராடச்

சக்தியற்ற இனம் வேர்விட்டு வளராது என்பதையும் நம் நாட்டில் பிறந்த ஒவ்வொருவருக்கும் தெளிவாக எடுத்துச் சொல்லுங்கள்.

"பொறுப்பு உங்களுடையது: அதிகாரம் உங்களுடையது. ஊர்ச்சபைத் தலைவர்களிலிருந்து நாட்டுத் தலைவர்களான சிற்றரசர் வரை இங்கு கூடியிருக்கிறீர்கள். உங்களுக்கும் ஒரு சொல்: இந்த நாட்டின் மக்கள் என்னுடைய சொந்தக் குழந்தைகள். அவர்களுக்குத் தீங்கு செய்தால் அது எனக்குச் செய்த தீங்காகும். அதுவே ராஜத்துரோகம்!—பெரிய அதிகாரிகள் சுற்றி வந்து ஊர்ச்சபை கூடும்போது, தலைவர்களின் போக்கில் தவறுகண்டால், பயிரையே மேய்ந்த வேலிகளாக அவர்கள் கருதப்படுவார்கள்.

"நம்முடைய போராட்டங்களில் நாம் வெற்றி பெற, நாம் வளம் பெற்று வாழ இறைவன் பேரருள் புரிவானாக!"

மாமன்னரின் மணிமொழிகள் முடிந்த பின்னரும் அவை நெடுநேரம் ஒவ்வொருவர் செவிகளிலும் ஒலித்துக் கொண்டே இருந்தன. சபையைவிட்டு அரசர் பெருமான் சென்றபிறகு, மெல்ல ஒவ்வொருவராகச் சிந்தனையில் ஆழ்ந்தபடியே எழுந்து சென்றனர்.

சபை கலைந்து நடுப்பகல் உணவும் முடிந்தது. வணிகர் தலைவர் தூவீர நாச்சியப்பர் விடைபெற்றுக் கொண்டு செல்வதற்காக மாமன்னரின் திருமுகம் காண விரும்பினார். அவரைத் தனியே வைத்துக் கொண்டு அரைநாழிகைப் பொழுது அவரிடம் அந்தரங்கமாக உரையாடினார் இராஜேந்திரர். "வாணிகப் பொறுப்பின் சுமை ஏற்கெனவே அதிகம். அதோடு நாடு காக்கும் பொறுப்பிலும் சிறு பகுதியை உங்களிடம் விட்டுவைக்க நினைக்கிறேன். உங்களைச் சேர்ந்தவர்கள் நாலு திசைகளுக்கும் செல்கிறார்கள். அவர்களில் உங்கள் நம்பிக்கைக்கு மிகவும் பாத்திரமானவர்கள் சிலரோடு என் ஆட்கள் ஒவ்வொருவரையும் நீங்கள் அனுப்பி வைக்க வேண்டும்."

"பொன் விளையும் இந்த மண்ணுக்கு எங்களால் ஆகும் பணியைச் செய்ய எப்போதும் சித்தமாய்க் காத்திருக்கிறோம், சக்கரவர்த்திகளே!"

"உங்களை நான் நம்புகிறேன். இதே நம்பிக்கையைப் பெறக் கூடிய வணிகர்கள் உங்களிடம் இருக்கிறார்களா?"

"பேரரசின் ஒற்றர்கள் ஒருவேளை மாறினாலும் மாறுவார்கள். சோழ நாட்டின் சோற்றுக் கடனை நாங்கள் ஒருபோதும் மறக்க மாட்டோம்."

"ஈழ நாட்டுக்குப் புறப்படுவதற்குள் எங்கள் ஒற்றர் சிலரைத் தனித்தனியே உங்களிடம் அனுப்பி வைக்கிறேன். பாண்டிய சேர நாட்டு வணிகர்களிடம் அவர்களைப் பணியாற்றச் செய்யுங்கள். ஒரு ஒற்றனுக்கு மற்றொரு ஒற்றன் இருக்குமிடம் தெரிய வேண்டாம்."

"சித்தம் சக்கரவர்த்திகளே!"—சிரம் தாழ்த்திக் கரம் கூப்பி விடைபெற்றுக் கொண்டார் வணிக மன்னர்.

### பத்தாம் அத்தியாயம்

## மரக்கலத்தில் ஒரு பாலம்

இராஜேந்திரர் ஆற்றிய வீர உரையின் எதிரொலி சோழப் பேரரசின் மூலை முடுக்குகளிலெல்லாம் முழங்கத் தொடங்கியது. ஊர்தோறும் உள்ள அத்தாணி மண்டபத்தின் முரசுகள் அதிர்ந்தன. திரள் திரளாக மக்கள் கூட்டம் ஊர்ச்சபைத் தலைவர்களின் வாயசைவுக்குக் காத்திருந்தது.

மாமன்னரின் செய்தியைத் தலைவர்கள் கவி நயத்தோடு மக்களுக்கு எடுத்துரைத்தார்கள். சக்கரவர்த்தியின் முகப் பொலிவு, அவரது நெடுந்தோற்றம், ஏறு நடை, வீரப்பார்வை, செங்கோலின் பொன்னொளி இவ்வளவையும் வர்ணித்துவிட்டு, பெருஞ்சபையின் பேரெழில் காட்சியை மக்கள் கண் முன்னே கொண்டு வந்தார்கள். பிறகே அங்கு மாமன்னரின் மணிமொழிகள் முழங்கப் பெற்றன.

"உழைப்பில்லையேல் ஊணில்லை; போரில்லையேல் வாழ்வில்லை!"—எங்கும் இதே பேச்சு; இந்தப் பேச்சே அவர்தம் உயிர் மூச்சு.

வான்மழை கண்ட பயிரெனச் சோழ வளநாடு தன் வாழ்க்கைப் போராட்டத்தின் மூல சக்தியை வளர்க்கத் தொடங்கியது. எங்கு பார்த்தாலும் புத்துணர்ச்சி, எங்கு திரும்பினாலும் புதிய ஆவேசம், எங்குமே சுறுசுறுப்பின் களியாட்டம்!

இளங்கோவேள், தஞ்சைமாநகரைச் சூழ்ந்திருந்த சிற்றூர்களில் சில தினங்கள் உலவிவிட்டு அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். மாமன்னரைத் தனிமையில்

கண்டு மக்களிடம் தான் கண்டுவந்த புதிய விழிப்பை விவரித்தான். "படையில் சேர்வதற்காக இளைஞர்களின் கூட்டம் துடி துடிக்கிறது; உழவர்களோ, 'ஒரு கலம் விளைந்த மண்ணில் மூன்று கலம் நெல் விளைப்போம்' என்று மார் தட்டுகிறார்கள்."

"மகிழ்ச்சிக் குரிய செய்தி" என்றார் சக்கரவர்த்தி. "ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார்கள். நீ பார்த்து வந்த இடங்களைப் போலவே இந்த மண்டலம் முழுவதிலும் யுத்த ஆர்வம் மலர்ந்திருந்தால் நல்லதுதான்."

பிறகு எதையோ நினைத்துக் கொண்டவர் போல் இராஜேந்திரர், "உன்னுடைய நண்பன் ஒருவன் என்னைப் பார்க்க விரும்புவதாய்ச் சொன்னாயே, அவனை அழைத்து வருவதற்கு ஆளை அனுப்பு" என்று இளங்கோவிடம் பணித்தார். ஆள் சென்ற பிறகு வீரமல்லனின் தகுதியையும் திறமையையும் விசாரித்தார்.

"குறி தவறாமல் வேல் எறிவான். குதிரைமீதிருந்து வாள் சுழற்றுவதில் கை தேர்ந்தவன்; அவனுடைய கண்கள் வெகு கூர்மையானவை" என்று கூறிய இளங்கோ, அவனுக்கும் தனக்கும் நெருங்கிய பழக்கம் ஏற்பட்டதன் காரணத்தையும் விளக்கினான். ஒரு சிற்றரசின் இளவரசனுக்கும், சாதாரண நூற்றுவர் படைத்தலைவனுக்கும் நட்பு ஏற்பட்டதை மாமன்னர் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா?

"நான்கைந்து ஆண்டுகளுக்கு முன்னால் கருக்கிருட்டு நேரத்தில் நானும் வீரர்கள் சிலரும் குதிரைகளில் காட்டு வழி கடந்து கொண்டிருந்தோம். முதலில் சென்று கொண்டிருந்த நானோ, எனக்குப் பின்னால் வந்த வீரர்களோ, மரக்கிளையிலிருந்து தலை கீழாகத் தொங்கிக் கொண்டிருந்த கருநாகத்தைக் கவனிக்கவில்லை. எனது தோளில் விழுந்து கடித்திருக்க வேண்டிய விஷப் பாம்பிடமிருந்து என்னைக் காப்பாற்றினான் அவன்."

"ஓ! உயிர்காத்த தோழன் அவன் என்று சொல்."

"ஆம், சக்கரவர்த்தி! நாலைந்து வீரர்களுக்கும் பின்னால் வந்துகொண்டிருந்தவனின் கண்களில் எப்படியோ அந்தக் கருநாகம் தட்டுப்பட்டுவிட்டது. அவன் வீசிய வேலை எறியவும், அதனால் அடிபட்டுச் செத்த பாம்பும் ஒன்றாக என் குதிரையின் பிடரியில் வந்து விழவே நான் திடுக்கிட்டேன். - மரத்துக்குப் பின்புறம் மறைவில் ஒளிந்துகொண்டிருப்பவன் கூட அவனுடைய வேலெறிக்குத் தப்ப முடியாது."

"திறமை தெரிந்தது. தகுதியைச் சொல்; நம்பக் கூடியவன்தானா?"

ஒருகணம் தயங்கினான் இளங்கோவேள். தான் இதற்குக் கூறும் மறுமொழியில் நண்பனின் வாழ்வும் வளர்ச்சியுமே அடங்கியுள்ளன என்று அவனுக்குத் தெரியும். 'நம்பக் கூடாதவன்' என்று எப்படி வீரமல்லனைச் சொல்வது? "முரடன்; முன்யோசனையில்லாமல் பேசுவான்; சிறிது அவசர புத்திக்காரன். இவ்வளவுதானே?"

"ஏன் தயங்குகிறாய் இளங்கோ?" என்று கேட்டுச் சிரித்தார் சக்கரவர்த்தி. "நம்பக்கூடாதவனிடம் எப்படி நட்பு கொண்டிருக்க முடியும் என்று கேட்க விரும்புகிறாயா? அதுவும் சரிதான்."

"நல்லவன்தான்; அவனை நம்பலாம். ஆனால் சிறிது அவசர புத்திக்காரன்" என்றான் இளங்கோ.

"இத்தனை பெரிய சாம்ராஜ்யத்தைக் கட்டிக் காப்பதென்றால் பல்லாயிரக் கணக்கான மனிதர்களை நம்பத்தான் வேண்டியிருக்கிறது. அந்த இளைஞனின் தகுதியை அறிய ஒரு பொறுப்பைக் கொடுத்துப் பார்ப்போம்."

வீரமல்லனின் வரவைச் சேவகன் அறிவிக்கவே, மாமன்னரின் முன்பு வந்து வணக்கம் செலுத்தி நின்றான் வீரமல்லன். அவனுடைய முகத்தை உற்றுப் பார்த்து விட்டு, இராஜேந்திரர் கூறத் தொடங்கினார்:—



"இளங்கோ உன்னைப் பற்றிக் கூறினான். உன் தமையன் ராஜமல்ல முத்தரையனை எனக்கு நன்றாகத் தெரியும். அவன் உயிருடன் இருந்திருந்தால் இதற்குள் குஞ்சர மல்லர் படைச் சேனாபதியாக ஆகியிருப்பான். சோழவள நாட்டு மன்னனைத் தன் உயிரென மதித்தவனின் தம்பி நீ. - அவனுடைய வீரத்தைப் போற்றுவதற்காக, நூற்றுவர் படைத் தலைவனாக இருக்கும் உன்னை இன்றிலிருந்து ஆயிரவர் படை நாயகமாக உயர்த்தியிருக்கிறேன்."

"மகிழ்ச்சி சக்கரவர்த்திகளே!"

"பாண்டிப் படை மாதண்ட நாயகர் கிருஷ்ணன் ராமனிடம் சொல்லியிருக்

கிறேன். அவரிடம் ஓலை பெற்றுக் கொண்டு வாணிகர் தலைவர் ஜயவீர நாச்சியப்பரைப் போய்ப் பார். அவர் உன்னைப் பாண்டிப் பகுதியிலுள்ள வணிகர் ஒருவரிடம் அனுப்புவார். அங்கிருந்துகொண்டு நீ நாட்டின் நடப்பு பற்றித் அப்போதைக்கு அப்போது மதுரைக்கு வந்து சொல்லவேண்டும். நீ அங்கு போய்ச் சேர்வதற்குள் மாதண்ட நாயகரும் மதுரைக்கு வந்துவிடுவார்.''

வீரமல்லனின் முகம் இதைக் கேட்ட பிறகு வாட்டமுறத் தொடங்கியது. அவன் எதையோ சொல்வதற்கு வாய் திறந்தான்; பிறகு மூடிக்கொண்டான்.

''என்ன சொல்கிறாய்? பதவி உயர்ந்தும் பொறுப்புக் கிடைக்கவில்லையே என்று தயங்குகிறாயா? இப்போது உன்னிடம் கொடுத்திருக்கும் பொறுப்பு நீ நினைப்பதைவிடப் பெரியது. - அடுத்த போருக்கு நீயே முன்னின்று ஒரு படைப் பிரிவை நடத்திச் செல்லலாம். வீரனுக்குத்தானா நம் நாட்டில் வேலை இல்லை?''

''ஈழத்துப் போருக்கு...'' என்று சொற்களை மென்று விழுங்கினான் வீரமல்லன்.

''நம் நாட்டு வீரர்கள் எல்லோருமே அங்கு வரத் துடிக்கிறார்கள். வீரமல்லா! நம்முடைய எண்திசைப் படைகளையும் ஒன்றாக அங்கு அனுப்பினால், அந்தச் சிறு தீவு நம் கனம் தாங்காமல் கடலுக்குள் அமிழ்ந்தாலும் அமிழ்ந்துவிடும்!'' மாமன்னர் சிரித்துவிட்டு, ''அதனால்தான் இளவரசன் ராஜராஜனைக் கூடத் தடுத்து நிறுத்திவிட்டேன்; நீயும் சற்றுப் பொறுத்துக்கொள்'' என்று கூறினார்.

வீரமல்லனுக்கு மாமன்னர் விடை கொடுத்தனுப்பிய பிறகு, இளங்கோவும் வெளியில் வந்து நண்பனிடம் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டான். ''படை நாயகனாக உயர்ந்திருக்கிறாய்; இன்னும் உயரப்போகிறாய்; என் வாழ்த்துக்களை ஏற்றுக்கொள்'' என்றான்.

வீரமல்லனுக்கு உற்சாகம் பிறக்கவில்லை. ''நீ உன் வீரத்தைக் காட்ட ஈழத்துக்குப் போகிறாய்; நானோ ஒற்றனாக உளவறியச் செல்கிறேன். எனக்கு இது பிடிக்கவில்லை, இளங்கோ!''

இளங்கோவுக்கு இப்போது அருள்மொழி கூறிய விவேகம் என்ற சொல் நினைவுக்கு வந்தது. வீரமல்லனை அணைத்துக்கொண்டே, ''விவேகம் நிறைந்த வேலைக்குப் போகிறாய்; நீ செல்லும் வெற்றிப் பாதைக்கு முதற் படி இது. உன் கடமையில் கண்ணும் கருத்துமாக இரு. ஈழத்திலிருந்து உயிருடன் திரும்பி வந்தால் மீண்டும் உன்னைச் சந்திக்கிறேன்'' என்றான்.

''நீ கட்டாயம் திரும்பி வருவாய். அப்போதுதான் என் கனவுகள் நிறைவேறும். அதற்காகவாவது நீ திரும்பி வரவேண்டும்!'' என்றான் வீரமல்லன்.

நண்பர்கள் பிரிந்தனர்.

சித்திரா பௌர்ணமிக்குப் பிறகு வைகாசி முழு நிலவும் வந்தது. அதை அடுத்த ஆனி மாதத்து வளர்பிறை நன்னாளில் ஈழத்துக்குப் புறப்படுவதென்ற நிச்சயமும் ஆயிற்று. மணமணவென்று ஆயத்தங்கள் நடைபெற்றன. நாடு நகரமெங்கணும் செய்தி பரவியது.

காலாட் படையினர் முன்னதாகவே நாகைத் துறைமுகம் நோக்கி நடக்கலாயினர். குதிரைப் படையும் அடுத்தாற்போல் விரைந்தது. வேழங்கள் ஈழம் செல்லவில்லை என்றாலும், நாட்டு மக்களது ஊக்கம் பெருகுவதற்காகக் குஞ்சர மல்லர்களைத் தம்மோடு நாகை வரையிலும் யானைகள் மீதமர்ந்து வரப் பணித்திருந்தார் சக்கரவர்த்தி. தஞ்சை அரண்மனையின் கீழவாயில் மதில் சுவருக்கு வெளியே அசைந்தாடும் மலைத் தொடர் வரிசைகளைப் பல நூறு யானைகள் காத்து நின்றன.

தஞ்சைப் பெரிய கோயிலுக்குச் சென்று சிவபெருமானை அஞ்சலி செய்துவிட்டுத் திரும்பியிருந்தார் இராஜேந்திரர். அவரோடு இளங்கோ, வல்லவரையர், மதுராந்தக வேளார் ஆகியோரும் சென்று வந்தனர். இளங்கோவேள் அந்தப்புரத்துக்குச் சென்று பெரிய குந்தவையாரிடமும், மகாராணி வீரமாதேவி முதலியவர்களிடமும் ஆசி பெற்றுக் கொண்டு, தன் தாயார் ஆதித்த பிராட்டியாரிடம் சென்றான். தஞ்சை மாநகர்ப் பொறுப்பையும் மதுராந்தக வேளார் ஏற்கவேண்டி இருந்ததால், அவர் குடும்பமே தஞ்சை அரண்மனைக்கு வந்துவிட்டது.

ஆதித்த பிராட்டியார் பொங்கிவரும் பாசவெள்ளத்துக்கு அணைபோட முடியாத நிலையில் தமது மகனை அணைத்துக் கொண்டு அந்த அணைப்பிலிருந்து அவனை நழுவவிட மனமில்லாமல், ''வெற்றி வீரனாகத் திரும்பி வா, மகனே!'' என்று விடை கொடுத்தார். விடை கொடுத்



தாரே தவிர அவரது பிடி தளரவில்லை. அவரது கன்னங்களில் வழிந்த கண்ணீர்ப் பெருக்கை இளங்கோ துடைத்துவிட முயன்றபோது, "துடைக்காதே மகனே, இது ஆனந்தக் கண்ணீர்!" என்று சொல்லித் தடுமாறினார். ஒரே மகன்; அவருக்கு முன்னும் பின்னும் அவன் ஒருவனேதான்."

"சக்கரவர்த்திகளும் சாமந்த நாயகரும் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள் இளங்கோ!" என்ற குரல் கேட்டு ஆதித்த பிராட்டி திரும்பிப் பார்த்தார். அங்கே சிலைபோல் நின்று கொண்டிருந்த தம் கணவரின் உருவத்தைக் கண்டவுடன் அவரது கரம் தானாக நழுவி இளங்கோவுக்கு விடுதலை அளித்தது.

அருள்மொழியிடம் சொல்லிக் கொள்ள வேண்டுமென்பதற்காக இளங்கோ சுற்று முற்றும் பார்த்தான். அவன் கண்களில் அவள் தென்படவில்லை. இதற்குள் மதுராந்தக வேளார் முன்னால் விரைந்து செல்லவே, அவரைப் பின் பற்றிக் கூடத்துக்குள் சென்றான். பெண்களின் கூட்டமும் கூடத்தை நோக்கிப் புறப்பட்டது.

கூடத்தின் மையத்தில் கிழக்கே திரும்பியவண்ணம் சக்கரவர்த்தியும் வல்லவரையர் வந்தியத் தேவரும் நின்று கொண்டிருந்தார்கள். சக்கரவர்த்தியின் மெய்க்காவலரும் உடனிருந்தார். அவர்களோடு போய் ஒன்றி நிற்பதற்கு முன்னால், தன் தந்தையார் முன் மண்டியிட்டு அவர் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான் இளங்கோ.

"நான் கூறியது நினைவிருக்கிறதா? முடியோடுதான் நீ திரும்பிவரவேண்டும்!" என்றார் பெரிய வேளார். "இறைவன் துணையிருப்பான். சென்று வா!"

பெண்களுக்கிடையிலிருந்து ஆரத்தித் தட்டும் கையுமாக வெளிப்பட்டுக் கொண்டிருந்த அருள்மொழி இந்தக் காட்சியைக் கண்டாள். மதுராந்தக வேளார் தமது மகனிடம் கூறிய சொற்களைக் கேட்டாள். அவளையறியாமல் அவள் கரத்திலிருந்த பொன்தட்டு நடுங்கியது. இறுகப் பற்றிக்கொண்டு முன்னே வந்தாள்.

வரிசையாக நின்ற நால்வருக்கும் தன் வண்ணக் கரங்களின் வளை ஒலிக்க ஆரத்தி எடுத்தாள் அருள்மொழி. மஞ்சளும் சுண்ணமும் கலந்து செவ்விரத்தக் குழம்பாகக் காட்சியளித்தது ஆரத்திச் செந்நீர். அதில் பச்சை வெற்றிலைத் துண்டுகள் மிதந்துகொண்டிருந்தன. ஒவ்வொருவர் நெற்றியிலும் அந்தச் செந்நீரைத் திலகமாக இட்டு விட்டாள் அவள்.

இளங்கோவின் எதிரில் வந்து அருள்மொழி நின்றபோது இளங்கோவின் இமைகள் தாழ்ந்திருந்தன. அவளை ஏறிட்டு நோக்கும் மெய்த் துணிவு அவனுக்கு என்றுமே இருந்ததில்லை. ஆனாலும், அவன் விரும்பாதபோதும், அவள் முகம் அவன் விழிகளுக்கு ஒளி கொடுத்தது. தங்கத் தாம்பாளத்தின் செங்குழம்பில் சுடர்போல் பளிச்சிட்டது அருள்மொழியின் முகமா? அல்லது தேவி பராசக்தியின் திருமுகமா?

இளங்கோவின் சிந்தனை நரம்புகள் ஒன்று கூடும் புருவ மத்தியில் அருள்மொழியின் மென்மலர் விரல் பதிந்தது. அவளுடைய விரலின் ஸ்பரிசத்தையும் செந்நீரின் ஈரத்தையும் ஒருங்கே உணர்ந்தான் அவன். அனல் காற்றைப் போன்ற அவளுடைய மூச்சுக் காற்று அவனது நெற்றியைச் சுட்டது. தன் எதிரில் ஒரு பெண் வந்து நிற்பதாகவே அவனுக்குத் தோன்றவில்லை. அவள் வெற்றித் திருமகள்! ஆதி பராசக்தியின் அவதாரப் பெண்மணி!

தன்னை மறந்த ஆவேச வெறியில், "வெற்றி பெறுவோம்!" என்று அவன் வீரமுழக்கமிட்டான். அவனுடைய சுய நினைவு தவறிய நிலையில் வெளிவந்த சொற்கள் அவை. சுற்றியிருந்தவர்கள் கணப்பொழுது திடுக்கிட்டார்கள். பிறகு சுபசகுனமென்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

புறப்படுவதற்கு முன்பு இராஜேந்திரர் மீண்டும் ஒருமுறை அரண்மனைப் பெண்டிரைப் பார்த்துப் புன்னகை பூத்தார். மதுராந்தக வேளாரிடம் ஏதோ கூறினார். வல்லவரையர் தமது மூட்டுக் காதலி குந்தவையாரிடம், தம்மைக் குமரன் என்று எண்ணிக்கொண்டு, பரிகாசம் பேசி விடைபெற்றுக் கொண்டார். சற்று முன்பு ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீண்ட இளங்கோவேள், அங்கு நிற்பதற்கு நாணமுற்று வெளி வாயிலை நோக்கி ஓடினான். யானை மீதிருந்து வீரர்கள் எழுப்பிய போர் முரசம் அவனைத் தன்னிடம் அழைத்தது. ஆரத்தியைக் கொட்டிவிட்டுத் திரும்பிவந்த அருள்மொழி ஒரு கணம் அவன் வேகத்தைத் தடுப்பதுபோல்



அவன் எதிரில் தயங்கி நின்றாள். அவனும் தலை நிமிராமலே தயங்கினான்.

"வெற்றியோடு திரும்பி வாருங்கள், இளவரசே!"

இளங்கோவுக்கு மறுமொழி ஏதும் கூறத் தோன்றவில்லை. தன் கரங்களைக் குவித்தான். அவளுடைய கரங்களும் குவிந்தன. மறுகணம் அவன் மின்னலெனப் பாய்ந்தோடியதை அருள்மொழியின் கூப்பிய கரங்களிலிருந்த பொன்தட்டு எடுத்துச் சொல்லியது. கண்ணிமைக்காமல் திரும்பிப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் வழியவில்லை. கண்ணீர் இமைகளில் தேங்கி, பின்பு இரத்தத்தில் கலந்து, இதயத்துக்கே சென்றுவிட்டது.

யானைகளின் கூட்டம் நடந்ததால் தஞ்சை மாநகரில் எழுந்த புழுதிப் படலம் செம்மேகத் திரளைப்போல் வான வெளியில் திட்டுத் திட்டாக மிதந்தன. முன்னும் பின்னும் நூற்றுக் கணக்கான யானைகள் அசைந்தாடிச் செல்ல, மத்தியில் பட்டத்து யானையில் மாமன்னரும் மெய்க்காவலரும் வீற்றிருந்தார்கள். அடுத்த யானையில் வல்லவரையருக்கு அருகில் அமர்ந்திருந்தான் இளங்கோ.

மணியோசை, முரசொலி, மக்களின் ஆரவாரம், பல்வகை வாத்தியங்களின் முழக்கம் யாவுமாகச் சேர்ந்து ஒரே ஒலி வெள்ளமாக அலைமோதியது. மாடங்களின் மீது நின்ற மங்கையர் மங்கல வாழ்த்துப் பாடிக்கொண்டே மலர் மாரி பொழிந்தார்கள். திருவிழா நகரமாகக் காட்சியளித்தது தஞ்சை. இன்னும் தஞ்சைக்கப்பால் நாகைப்பட்டினம்செல்லும் வழிதோறும் ஒரே ஜனத் திரள். சாலையின் இரு மருங்கிலும் மரங்களின் மீதும், தரையிலும் கூரைகளின் உச்சியிலும் ஒரே மனிதர்கள், மனிதர்கள், மனிதர்கள்தான்!

சோழ வளநாட்டுப் போர்க் கலங்கள் நாகைத் துறைமுகத்திலிருந்து தெற்குத் திசை நோக்கிப் புறப்பட்ட காட்சியை இங்கு எங்ஙனம் வர்ணிப்பது? கடைசிக் கப்பல் நாகைப்பட்டினத்தில் நின்றதென்றால், முதற் கப்பலைக் காண்பதற்கு நாம் பரி மீதமர்ந்து திருமறைக் காட்டை நோக்கிப் பறந்தல்லவோ செல்லவேண்டும்? பட்டொளி வீசிப் பறக்கும் புலிக் கொடிகளில் மஞ்சள் வெய்யில் தங்கத்தைத் தூவ, அந்தக் கொடிகளில் பொறிக்கப் பெற்றுள்ள புலிகள் உயிர் பெற்று உடனேயே தென் திசையில் தாவத் துடிக்கின்றனவே!

காற்றில் விம்மிக் கானமிசைக்கும் பாய்மரங்களின் வீரப் பேரொலியை விளக்குவதா? முந்நூற்றுக்கு மேற்பட்ட மரக்கலங்களில் ஒரு லட்சம் போர்வீரர்கள் நின்றுகொண்டு தமிழ்த் திருநாட்டை வாழ்த்திப் பாடுகிறார்களே. அந்தப் பாட்டைக் கேட்பதா? அந்தப் பாடலால் உணர்ச்சியும் உவகையும் பெற்ற பேரலைகள் கலங்களின் மீது மோதி, "வெற்றி பெறுக! வெற்றி பெறுக!" என்று வெண் முத்துக்களை உதிர்க்கின்றனவே. அந்தப் பேரெழிலைக் காண்பதா?

காவியத் தலைவன் இராமன் முன்னொரு காலத்தில் தென்னிலங்கை செல்வதற்காகக் கடலுக்குக் குறுக்கே அணை கட்டினான். தமிழ்த் தலைவன் வேங்கையின் மைந்தனோ சங்கிலித் தொடர் போன்ற ஒரு மாபெரும் பாலத்தை மரக் கலங்களாலேயே கட்டிவிட்டான். ஆம், திருமறைக்காட்டில் அவனது கடைசிக் கலம் மிதக்க, முதற்கலமோ ஈழத்தின் வடக்குக் கரை கண்டு ஆனந்தத்தில் அலைமீது அற்புத நடனம் புரிந்து கொண்டிருந்தது. (தொடரும்)

---

கொச்சைத்தமிழ்

## 'அகராதி பிடிச்சவன்'

கர்வம் பிடித்தவனை 'அகராதி பிடிச்சவன்' என்று கொச்சைத் தமிழிலே கூறுவதுண்டு. அகம்பாவத்துக்கும் அகராதிக்கும் என்ன தொடர்பு? இவ்விரண்டுக்கும் ஒரு தொடர்பிருப்பதாகப் பாமர மக்கள் கருதுகிறார்கள். 'அகராதியை ஒருவன் முற்றும் படித்து விட்டால் எல்லாம் தெரிந்து விட்டது என்ற மண்டைச் செருக்கு உண்டாகி விடும்' என்பது அவர்கள் கருத்து. 'கல்லாடம் படித்தவனோடு சொல்லாடாதே!' என்னும் பழமொழி புலவர் உலகத்தில் வழங்குதல் போல, 'அகராதி படித்தவனை அணுகாதே' என்ற எச்சரிக்கை பாமர உலகத்தில் எழுந்தது போலும்!

—பேராசிரியர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை

# நாட்டுக்கொரு நல்லவள்



'வீட்டுக்கொரு வாசற்படி' என்றும் அதைச் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். ஒரு வீட்டுக்குள் புகும்போது, நாமாக அதைக் கண்டுபிடிக்காவிட்டால் கூட அதுவாக வலிய வந்து நம் காலில் இடித்து நம்மைத் தடுத்தாட்கொண்டு விடும்!

ஆனால் அவ்வளவு சுலபமாக நாட்டுக்கொரு நல்லவளைக் கண்டுபிடித்துவிட முடியாது. ஒவ்வொரு பெண்மணியும் ஒவ்வொரு விதத்தில் நல்லவளாக இருக்கலாம். ஆனால் நாட்டுக்கொரு நல்லவள் என்ற பாராட்டைப் பெற வேண்டுமானால் அதற்காக ஒரு பெண்மணி எத்தனையோ கஷ்டங்களை அநுபவிக்கத் தயாராயிருக்கவேண்டும் என்பது மேற்படி படத்திலிருந்து நன்கு தெரிய வருகிறது.

வீண் பிடிவாதத்தினால் குடும்ப ஒற்றுமையே நாசமாகிப் பல அல்லல்கள் விளையும் என்பதை இந்தப் படம் தெளிவாக விளக்குகிறது.

கிராமத்தில் பரம்பரை பரம்பரையாக ஒற்றுமையாயிருந்து வரும் குடும்பங்கள் அற்ப காரணங்களுக்காகப் பிரிந்துபோவதைப் படத்தில் நேருக்கு நேர் காண முடிகிறது. டி. எஸ். பாலையா, எஸ். பீர் முகமது — இருவரும் ஒருவருக்கொருவர் சளைக்காமல் பகைமையை வளர்க்கின்றனர். பற்றி எரியும் தீயில் தண்ணீரை ஊற்றினாலும், அதையும் அந்தத் தீ பஸ்மீகரம் செய்து விடுவது போல், சுந்தரம் பிள்ளையின் ஒற்றுமை முயற்சிகளெல்லாம் பகைமைத் தீ விழுங்கி விடுகிறது. கடைசியில் சுந்தரம் பிள்ளையே அதற்குப் பலியாகிறார்.

சுந்தரம் பிள்ளையாக வரும் சகஸ்ரநாமம் மிகவும் இயற்கையாக நடித்திருக்கிறார். அவர் மனைவி பொன்னம்மாளாக வருபவர் பண்டரிபாய் என்று சொன்னால் போதும்—அவர்தான் "நாட்டுக்கொரு நல்லவள்" என்று சொல்ல வேண்டியதில்லை. பண்டரிபாயைத் தவிர வேறு எந்த நட்சத்திரமும் அந்தப் பாத்திரத்துக்கு அவ்வளவு பொருத்தமாயிருந்திருக்க முடியாது.

டி. எஸ். பாலையாவின் நடிப்பு மிகவும் நன்றாயிருக்கிறது. அவர் மட்டும் இந்தப் படத்தில் இல்லையென்றால் கிராமத்துச் சண்டைகள் களை கட்டியே இருக்காது.

நாட்டுக்கொரு நல்லவளின் மகன் சங்கர். அவன் ஆருயிர்க் காதலி கௌரி. பெரியவர்களின் சண்டை காரணமாகத் தங்கள் திருமணம் தடைப்பட்டு விடுமோ என்று பயந்த சங்கர் கௌரிக்கு ரகசியமாகத் தாலி கட்டுகிறான். இது பகைமையை வளர்க்கிறது.

கடைசியில், முற்றிப் போன சண்டையில் நாட்டுக்கொரு நல்லவளின் மண்டை உடைந்த பிறகுதான் பூரண ஒற்றுமை ஏற்படுகிறது. படமும் முடிகிறது!

சங்கராக வரும் ராஜேந்திரன் கௌரியைக் காதலிக்கிறார். கல்யாணம் செய்து கொள்கிறார். சேற்றைக் குழைத்துச் சுவர் எழுப்பி வீடு கட்டுகிறார். நாட்டுக்கொரு நல்லவளிடம் (தாயாரிடம்) கன்னத்தில் அறை வாங்கிக் கொள்கிறார்.

விஜயகுமாரிதான் கௌரி. முரட்டுத் தந்தையிடம் அடிபட்டுக் கதறவும், காதலனைப் பிரிந்து ஏங்கி, கடைசியில் உழவுத் தொழிலில் ஈடுபடவும் நிறையச் சந்தர்ப்பம் கிடைக்கிறது அவருக்கு.



ஆரம்பத்தில் கொஞ்சம் புதுமையாகத் தோன்றிய படம் பிற்பகுதியில் 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வ' ஆரம்பித்து விட்டது. ஒரு வீட்டில் வந்த 'டைபாய்டு' ஜுரம் எல்லா வீடுகளுக்கும் பரவுவது போல், ஒரு படத்தில் வந்த கருத்தும், கதையம்சமும் மற்றப் படங்களுக்கும் பரவுவது இயல்பு எனக் கொள்ள வேண்டியதுதான் போலும்! டைபாய்டு ஜுரம் ஜெயிக்கக் கட்டுப்படும். ஆனால் படக் காட்சிகள்....!



வண்ண மாளிகை களைப் பார்த்ததும், "பார்த்தாயா, படித் தவர்கள் வசிக்கும் இடத்தை!" என் றான் பரவசத்துடன்.

"பார்த்தேன், பார்த்தேன்; பத்து குடிசைகள் போட் டுப் பத்துக் குடும் பங்கள் நடத்த வேண்டிய இடத்தில் ஒரே ஒரு பங்களா அல்லவா கட்டியிருக் கிறார்கள்!" என்றான் முருகையன், ஒரே வியப்புடன்.

"பத்து என்ன, பதினாயிரம் குடிசைகள் கூடப் போட்டுக் கொடுக்கலாம், படிக் காத பதர்களுக்கு! நீ பார், ஐம்பத் தைந்தாம் நம்பர் வீடு எங்கே இருக்கிற தென்று?" என்றான் கண்ணாயிரம், வெறுப்புடன்.

"இங்கே ஒரு நம்பரையும் வெளியே இருந்தபடி பார்க்க முடியவில்லையே?"

"நம்பரைப் பார்க்க முடியாவிட்டால் என்ன, 'வள்ளிநாயகம் பி.ஏ., பி.எல்.' என்று 'போர்டு' போட்டிருக்கும், பார்!"

அப்படியே அங்கிருந்த போர்டுகளை யெல்லாம் பார்த்துக்கொண்டே வந் தான் முருகையன். "நாய்கள் ஜாக் கிரதை, நாய்கள் ஜாக்கிரதை!" என்று நாலைந்து போர்டுகளில் எழுதியிருந்த தைப் பார்த்ததும் அவனுக்கு என்ன தோன்றிற்றோ என்னமோ, "ஏன் அப்பா, இங்கே மனிதர்கள்தானே வசிக் கிறார்கள்?" என்றான் சந்தேகத்துடன்.

"மனிதர்கள் வசிக் காமல் நாய்களா வசிக்கும்?"

"அப்படித்தான் இங்கே எழுதியிருக் கிறார்கள்!"

"இருக்காது; எச் சில் இலை நக்கும் நாய் களுக்கு இவ்வளவு பெரிய பங்களாக்கள் இருக்கவே இருக் காது!"

"பட்டணத்திலே அப்படி நினைப்பதற் கில்லை, அப்பா! இங்கே படித்தவர் கள் கூட எச்சில் தட்டை நக்குகிறார் களாம்; அதற்கென்று அவர்கள் அங்கங்கே வைத்திருக்கும் கடை களுக்கு ஓட்டல் என்று பெயராம்!"

"வாயை மூடு. படித்தவர்கள் எதை யும் தெரியாமல் செய்ய மாட் டார்கள்!"

"அது என்னமோ உண்மைதான், அப்பா! அவர்கள் எதையும் தெரிந்து தான் செய்கிறார் களாம்!"

"அப்புறம் என்ன? விடு, கதையை; தேடு, வக்கீல் வள்ளிநாயகம் வீட்டை!" என்றான் கண்ணாயிரம்.

இந்தச் சமயத்தில் 'ஹாட்'டும் 'ஸூட்'டும் அணிந்த ஒருவர் எதிர்த் தாற்போல் வர, அவரை நோக்கி முரு கையன் கேட்டான்:

"இங்கே வக்கீல் வள்ளிநாயகத்தின் வீடு எங்கே இருக்கிறதென்று உங்களுக் குத் தெரியுமா?"

"என்னை மன்னியுங்கள். எதிர்த்த வீட்டுக்காரர் என் மனைவியை அழைத் துக் கொண்டு போய் வைத்துக் கொண் டிருக்கிறார்; அவரைப் பற்றிப் போலீசில் புகார் செய்ய நான் அவசரமாகப் போய்க் கொண்டிருக்கிறேன்!"

அவர் நிற்கவில்லை; போய்விட்டார்.

"அடபாவமே! எதிர்த்த வீட்டுக் காரரிடம் இருக்கும் மனைவியை மீட் பதற்குக் கூடப் போலீஸாரின் உதவியை நாடும் அளவுக்கா இவர் கோழையாக இருக்க வேண்டும்?" என்றான் முரு கையன், அநுதாபத் துடன்.



"வாயை மூடு. படித்தவர்கள் எதை யும் தெரியாமல் செய்ய மாட்டார் கள்!" என்றான் கண் ணாயிரம், ஆத்திரத் துடன்.

"அது என்னமோ உண்மைதான், அப்பா! அவர்கள் எதையும் தெரிந்து தான் செய்கிறார் களாம்!"

"அப்புறம் என்ன? விடு, கதையை; தேடு, வக்கீல் வள்ளி நாயகம் வீட்டை!"

அப்போது அந்தத் தெருவின் திருப்பத்தி லிருந்த ஒரு வீட்டு முகப்புச் சுவரில், 'வள்ளிநாயகம் பி.ஏ., பி. எல்.' என்ற 'போர்டு' தென் படவே, "இனி தேட வேண்டிய அவசிய மில்லை, அப்பா! இதோ இருக்கிறது, அவருடைய வீடு!" என்றான் முருகையன்.



உடனே மேல் துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டு, "சாமி, சாமி!" என்று அந்த வீட்டுக்கு முன்னால் நின்று குரல் கொடுத்தான் கண்ணாயிரம்.

அவ்வளவுதான்; "உர்ர்ர்! லள், லள், லள்!" என்று குரைத்துக் கொண்டே அந்த வீட்டு நாய் அவனை நோக்கி ஓடி வந்தது.

'ஒருவேளை முருகையன் சொன்னது உண்மையாயிருக்குமோ?'

இந்த எண்ணத்துடன் தன் மகனைத் திரும்பிப் பார்த்தான் கண்ணாயிரம்.

"இப்பொழுதாவது சந்தேகம் தீர்ந்ததா, உங்களுக்கு? இங்கெல்லாம் நாய்கள்தான் வசிக்கின்றன!" என்றான் முருகையன்.

அதற்குள் அந்த நாயைத் தொடர்ந்து வந்த வேலைக்காரன், "யார் ஐயா, நீங்கள்? உங்களுக்கு இங்கே என்ன வேலை?" என்று எரிந்து விழுந்தான்.

அதைப் பொருட்படுத்தாமல் அவனையும், அவனை முந்திக் கொண்டு நின்ற நாயையும் மாறி மாறிப் பார்த்தான் முருகையன். பிறகு, 'குணத்தில் வித்தியாசம் இல்லாவிட்டாலும் உருவத்தில் என்னமோ வித்தியாசம் இருக்கத்தான் இருக்கிறது!' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்.



கேட்ட கேள்விக்கு உடனே பதில் கிடைக்காமற் போகவே, "ஏன் விழிக்கிறீர்கள்? இரவு எங்கே, எப்படி கன்னம் வைக்கலாம் என்று யோசிக்கிறீர்களா, என்ன?" என்றான் வேலைக்காரன் பொறுமை இழந்து.

"அட, கடவுளே! இது கன்னமிடும் கை இல்லே ஐயா, அன்ன மிடும் கை!" என்றான் கண்ணாயிரம், தன் கையைக் காட்டி.

"பட்டணத்திலே திருடனுக்கும் திருடாதவனுக்கும்கூட வித்தியாசம் தெரியாது போலிருக்கிறது!" என்றான் முருகையன்.

"திருட வரவில்லை யென்றால் வேறு எதற்குத்தான் வந்திருக்கிறீர்கள்? அதையாவது சீக்கிரம் சொல்லித் தொலையுங்கள்; எனக்கு நேரமாகிறது!"

"கோபித்துக் கொள்ளாதீர்கள், ஐயா! பட்டணத்திலே இவனைப் படிக்க வைக்க வேண்டுமென்று ஆசை; அதற்காகப் 'பச்சை மலை'யிலே இருக்கும் இரண்டு ஏக்கர் நிலத்தைப் 'பட்டணத்துச் சாமி'க்கு விற்றுவிட்டுப் பணத்தை வாங்கிக்கொண்டு போகலாமென்று வந்திருக்கிறேன்!"

"அதற்கு இவ்வளவு தூரம் வருவானேன்? அங்கே யாரும் இல்லையா, அதை வாங்க?"

"எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; இருந்தாலும், அதை விற்கும்போது 'பட்டணத்துச் சாமி'க்கே விற்கிறேன் என்று வாக்குக் கொடுத்துவிட்டேன்; அதை மீறலாமா?"

"சரிதான், அரிச்சந்திரனுக்கு நேர் வாரிசுபோலிருக்கிறது! அவர் இல்லை, போய் வாருங்கள்!"

"எங்கே போயிருக்கிறார்?"

"ஊட்டிக்கு!"

"எப்போது வருவார்?"

"நாளைக்கே வந்தாலும் வரலாம்; நாலு நாட்கள் கழித்து வந்தாலும் வரலாம்!"

கண்ணாயிரம் முருகையனின் முகத்தைப் பார்த்தான்; முருகையன் கண்ணாயிரத்தின் முகத்தைப் பார்த்தான். அவர்கள் இருவரையும் பார்த்த வேலைக்காரனோ, "சரி, பார்த்துக் கொள்

புருங்கள்; நான் வருகிறேன்!" என்று நாயை அழைத்துக் கொண்டு உள்ளே போய் விட்டான்.

அவன் என்ன செய்வான், பாவம்! எல்லாம் சகவாச தோஷம்; இல்லாவிட்டால் வீட்டுக்கு நாய் காவலென்றால், நாய்க்குக் காவலாக அவன் அங்கே இருந்து கொண்டிருப்பானா?



★

'நாளை' வந்து போயிற்று; 'நாலுநாட்'களும் வந்து போயின. வக்கீல் வள்ளிநாயகம் வரவில்லை; வரவேயில்லை.

அந்தப் 'பட்டணத்துச் சாமி'யை எதிர்பார்த்தபடி, 'பட்டிக்காட்டுச் சாமி'கள் இரண்டும் எல்லோரா நகரைச் சுற்றிச் சுற்றி வந்தன; கண்ட இடத்தில் உண்டு, கண்ட இடத்தில் உறங்கின. கட்டுச் சோறு தீர்ந்தது; கையிலிருந்த காசும் கரைந்தது.

"இன்னும் எத்தனை நாட்கள் அப்பா, இப்படி நாம் இங்கே சுற்றிக் கொண்டிருக்க முடியும்?" என்றான் முருகையன்.

"அதற்காக வந்த காரியத்தை முடிக்காமலா போய்விடுவது? நீ பேசாமல் இரு. பட்டணம் நம்மைப் பட்டினி போட்டுவிடாது!" என்றான் கண்ணாயிரம்.

இந்தச் சமயத்தில் யாரோ 'கலகல' வென நகைக்கும் சத்தம் காதில் விழவே, இருவரும் திரும்பிப் பார்த்தனர். எதிர் வீட்டுத் தெருப்படிகளின் மேல் உட்கார்ந்திருந்த ஓர் ஏகாங்கி, "நகைத்தவன் நான்தான்; நாலு நாட்களாக நான் பட்டினி!" என்றான் விரக்தியுடன்.



"உங்களை விட்டுவிட்டா இந்த வீட்டில் உள்ளவர்கள் சாப்பிடுகிறார்கள்? அப்படிச் சாப்பிடுபவர்கள் திருடர்கள் என்று காந்தி தாத்தா கூடச் சொல்லியிருக்கிறாரே?" என்றான் கண்ணாயிரம், வியப்புடன்.

"இந்த வீட்டில் மட்டுமென்ன, எல்லா வீடுகளிலும் என்னை விட்டுவிட்டுத்தான் சாப்பிடுகிறார்கள்!"

"எங்கள் கிராமத்தில் அப்படி யாரையும் விடுவதில்லையே?"

"அங்கே சிறிய சிறிய குடிசைகள்; அவற்றுக்குள் பெரிய பெரிய உள்ளங்கள். இங்கே பெரிய பெரிய மாளிகைகள்; அவற்றுக்குள் சிறிய சிறிய உள்ளங்கள்!"

இதைச் சொல்லி அவன் வாய் மூடுவதற்குள், "ஏய், யார் அது?" என்ற குரல் உள்ளேயிருந்து இடி முழக்கம் போல் ஒலித்தது.

"என்ன அது?" என்றான் கண்ணாயிரம், அந்தக் குரலொலியின் அதிர்ச்சியால் ஒரு குலுங்கு குலுங்கி நின்று.

"ஒன்றுமில்லை; வீட்டுக்கு உரியவர்கள் என்னை உபசரிக்கிறார்கள்!" என்றான் ஏகாங்கி.

அடுத்த கணம் அவன் தலையில் ஒரு செம்பு தண்ணீர் வந்து விழுந்து சிதறி வழிந்தது!

எதிர்பாராத இந்தத் தாக்குதலைக் கண்டதும் முருகையன் கொஞ்சம் பின் வாங்கி நின்று, "இதுவும் உபசாரத்தைச் சேர்ந்தது தானா?" என்றான் கொஞ்சம் சந்தேகத்துடன்.

"ஆமாம்; பட்டிக்காட்டில் காலுக்குத் தண்ணீர் கொடுத்து உபசரித்தால், பட்டணத்தில் தலைக்குத் தண்ணீர் கொடுத்து உபசரிக்கிறார்கள்!" என்றான் அவன், தலையில் விழுந்த தண்ணீரைத் தன் கையால் முடிந்தவரை தட்டிவிட்டுக்கொண்டே.

அவனிடம் தன் மேல் துண்டை எடுத்துக் கொடுத்துவிட்டு, "ஒன்றும் புரியவில்லை; எனக்கு ஒன்றுமே புரியவில்லை!" என்றான் கண்ணாயிரம்.

"புரியும், இன்னும் இரண்டு நாட்கள் பட்டணத்தில் இருந்தால்!" என்று சொல்லிக்



என். ஆர். முத்தையா (மணமகன்) — செல்வகுமாரி

மணமகள் பெரும்பண்ணையூர் எஸ். எஸ். எம். தனிஸ்லாஸ் முத்துசாமி உடையார் குமாரத்தி. மணமகன் மேற்படியூர் பி. ஏ. சாமி உடையார் குமாரர். 19-6-59ல் திருமணம் நடந்தேறியது. எங்கள் அழைப்பிற்கு இணங்கி வருகை தந்தவர்களுக்கும் பரிசுகள் வழங்கியவர்களுக்கும் வாழ்த்துக்கள் அனுப்பியவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

வாழ்க. முத்தையா - செல்வகுமாரி

---

போன்: 65074 தந்தி: "RAIWAST"

# கே. ஏ. ராஜா

**வேஸ்ட் பேப்பர் வியாபாரி**

காரியாலயம் 64, ஆச்சாரப்பன் தெரு, சென்னை-1
கிளை [illegible], வரதா முத்தியப்பன் தெரு, சென்னை-1
பிரிக்குமிடம் 16, புட்பு சாஹிப் தெரு, சென்னை-1

கீழ்க்கண்ட ஸ்தாபனத்திற்கு மூலப்பொருள் சப்ளை செய்பவர்கள்

**மெஸர்ஸ். ரோடாஸ் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**

டால்மியாநகர் பீஹார்

உபயோகமற்ற காகிதங்களை விற்பனை செய்ய விரும்பும் காரியாலயத்தினரும், மற்றவர்களும் எங்களுடன் தொடர்பு கொள்ளலாம்

எமது நியாயமான விலையைக் கருதி எங்களிடம் தொடர்பு கொள்ளுங்கள்

---



# த்வார்க்கின்ஸ்

கை ஆர்மோனியப் பெட்டிகள் செய்வதில் கைதேர்ந்தவர்கள். மேற்படி ஆர்மோனியப் பெட்டிகள் தயாரிப்பதில் புதுமையைப் புகுத்தியவர்களில் 'த்வார்க்கின்ஸ்' முன்னணியில் நிற்கிறார்கள்.

விலை ரூ. 40/-லிருந்து ரூ. 550/- வரையில்

விபர விலை ஜாபிதாவுக்கு ஆங்கிலத்தில் எழுதுங்கள்

**த்வார்க்கின் & சன் பிரைவேட் லிட்.**

8/2, எஸ்பிளனேடு ஈஸ்ட் கல்கத்தா-1

கொண்டே துடைத்த துண்டை அவனிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு, "நன்றி; நான் வருகிறேன்!" என்று நடையைக் கட்டிவிட்டான் ஏகாங்கி.

★

அன்றிரவு.....

வண்டி மேடொன்றைத் தஞ்சமடைந்த தந்தையும் மகனும் வராத தூக்கத்தை வருந்தி அழைத்துக் கொண்டிருந்தனர். அப்போது, "ஐயா, ஐயா!" என்று அவர்களை யாரோ தட்டி எழுப்புவது போலிருந்தது. 'இங்கேயும் யாராவது விரட்ட வந்து விட்டார்களோ, என்னவோ!' என்ற பீதியுடன் இருவரும் எழுந்து உட்கார்ந்தனர். அவர்களுக்கு எதிர்த்தாற்போல் உட்கார்ந்திருந்த ஒரு கோவணாண்டி, "கோடை மாடுபோல் கிடக்கிறீர்களே, ஏதாவது சாப்பிட்டீர்களா?" என்று அவர்களை விசாரித்தான்.

'இல்லை' என்பதற்கு அடையாளமாக இருவரும் தலையை ஆட்டினர்.

"நான் நினைத்தது சரிதான்! இந்தாருங்கள்; எழுந்து கையை அலம்பிக் கொண்டு வாருங்கள்!" என்று ஒரு குடுவை தண்ணீரை எடுத்து அவர்களிடம் நீட்டினான், அவன்.

'பட்டணத்தில் இப்படியும் ஒரு பட்டிக்காடா!'

கண்ணாயிரத்துக்கு ஆச்சரியம் தாங்கவில்லை; சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுக்குச் சற்றுத் தூரத்தில் வைக்கோல் வண்டியொன்று அவிழ்த்து விடப்பட்டிருந்தது; அதற்கு அருகே இரண்டு மாடுகள் படுத்தபடி அசை போட்டுக் கொண்டிருந்தன; அந்த மாடுகளுக்குப் பக்கத்தில் இரண்டு கல்லடுப்புகள்; அவற்றில் ஒன்றின்மேல் சோற்றுப் பானை; இன்னொன்றின்மேல் குழம்புச் சட்டி!

'ஆஹா! பச்சைமலை கிராமமே பசி தீர்க்க வந்துவிட்டதுபோலல்லவா இருக்கிறது!'

இந்த எண்ணத்தில் தன்னை மறந்து நின்ற அவனைப் பிடித்து உலுக்கி, "என்ன யோசிக்கிறீர்கள்? நாம் வரும்போது இங்கே ஒன்றும் இல்லையே என்று யோசிக்கிறீர்களா?" என்றான் கோவணாண்டி.

"ஆமாம், நீங்கள் எப்போது வந்தீர்கள்?"

"நான் காலையிலேயே வந்துவிட்டேன்; இந்த வைக்கோலை விற்றுத் தீர்க்கும் வரை இங்கேதான் தங்கியிருப்பேன்!" என்றான் அவன், தன்னால் முடிந்தவரை அவர்களுக்கு நம்பிக்கை அளிக்கவேண்டும் என்பதற்காக!




தமாஷ் சபாஷ்!




"வந்த இடத்தில் எங்களை விருந்துக்கு அழைக்கிறீர்களே, நாளைக் காலையில் உங்களுக்குப் பழையது இல்லாமல் போய்விடுமே?" என்றான் கண்ணாயிரம், கொஞ்சம் தயக்கத்துடன்.

"நாளையைப் பற்றிக் கவலைப்பட நாம் யார்? கடவுள் இருக்கிறார், கொடுக்க; நாம் இருக்கிறோம், சாப்பிட! ம், பிடியுங்கள்! எப்பொழுது சாப்பிட்டதோ, என்னவோ?" என்றான் அவன், மீண்டும் குடுவையை நீட்டி.

அதை வாங்கி இருவரும் கையை அலம்பிக் கொண்டதும், "உட்காருங்கள்; என் தம்பி இதோ இலை வாங்கிக்கொண்டு வந்துவிடுவான்!" என்று அவர்களை உட்கார வைத்துவிட்டுச் சோற்றையும் குழம்பையும் கொண்டுவந்து அவர்களுக்கு எதிரே வைத்தான் கோவணாண்டி. அதற்குள் இலை வந்து சேர்ந்தது; நாட்டு வாழைப்

பத்தைப் பற்றிப் பேசிக்கொண்டே நாகரிகம் தெரியாத அந்த நாலு ஜீவன்களும் சாப்பிட்டு முடித்தன.

படுக்கத் துண்டை விரிக்கும்போது, "ஏன், அப்பா! அந்த வண்டிக்காரர் எவ்வளவு தூரம் படித்திருப்பார்?" என்றான் முருகையன்.

"நான் எவ்வளவு தூரம் படித்திருக்கிறேனோ, அவ்வளவு தூரம்தான் அவரும் படித்திருப்பார்!" என்றான் கண்ணாயிரம்.

★

அடுத்த நாள்......

வழக்கம் போல் வன்னிநாயகத்தின் வீட்டுக்கு வந்து, "வக்கீல் ஐயா வந்து விட்டாரா?" என்று விசாரித்தான் கண்ணாயிரம்.

"வந்துவிட்டார்! உட்காருங்கள்; இதோ வந்துவிடுவார்!" என்று அவருடைய அறைக்கு வெளியே போட்டிருந்த பெஞ்சைச் சுட்டிக் காட்டினான் வேலைக்காரன்.

கண்ணாயிரம் உட்காரவில்லை; நின்றது நின்றபடி நின்றான்.

உள்ளே யாரோ ஒரு கட்சிக்காரனுடன் வன்னிநாயகம் பேசிக் கொண்டிருப்பது அவன் காதில் விழுந்தது.

'இந்தக் குரல் எங்கேயோ கேட்ட குரலாயிருக்கிறதே!'

ஆம், வன்னிநாயகத்தின் குரல் மட்டும் அவனுக்குக் கேட்ட குரலாயில்லை; அவருடன் பேசிக் கொண்டிருந்த கட்சிக்காரனின் குரலும் அவனுக்குக் கேட்ட குரலாயிருந்தது.

சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகச் சற்றே உற்றுக் கேட்டான் அவன்:

"நீ வாங்கியது ரூபாய் ஆயிரந்தான்; இல்லையா?"

"வாங்கியது ரூபாய் ஆயிரந்தான்; எழுதிக் கொடுத்தது ரூபாய் இரண்டாயிரத்துக்கு!"

"அதை வைத்துக் கொண்டுதான் ரூபாய் இரண்டாயிரமும் அதற்குரிய வட்டியும் தனக்குச் சேரவேண்டுமென்று அவன் உன்மேல் வழக்குத் தொடர்ந்திருக்கிறான்; இதிலிருந்து நீ தப்பவேண்டுமானால் இப்போது ஒரே ஒரு வழிதான் இருக்கிறது!"

"சொல்லுங்கள்?"

"அந்த ஆயிரம் ரூபாயைக்கூட அவனிடமிருந்து நான் வாங்கவில்லை என்று நீ சொல்லிவிட வேண்டும்!"

"ஐயையோ! அப்படிக்கூடப் பொய் சொல்லலாமா?"

"என்ன ஐயையோ? அவன் பொய் சொல்லும்போது நீ பொய் சொல்லக் கூடாதா?"

"அது எப்படிச் சொல்ல முடியும்? நான்தான் அவனுக்கு எழுதிக் கொடுத்திருக்கிறேனே?"

"நீ எங்கே எழுதிக் கொடுத்தாய்? உனக்குத்தான் எழுதப் படிக்கத் தெரியாதே!"

"எழுதப்படிக்கத் தெரியாவிட்டாலும் பேனாவைத் தொட்டுக் கொடுத்திருக்கிறேனே!"

"தொட்டுக் கொடுத்த கையைத்தான் எப்போதோ துடைத்துக் கொண்டிருப்பாயே! சும்மா சொல், வழக்கில் வெற்றியடைந்த பின் எனக்கு நீ ரூபாய் ஐந்நூறு கொடுத்தால் போதும்!"

"கேவலம், ரூபாய் ஐந்நூறுக்காக நான் பொய் சொல்வதோடு உங்களையும் பொய் வழக்காட வைக்க வேண்டுமா?"

"இந்த உலகத்தில் எது பொய் இல்லை? 'எல்லாம் பொய்' என்றுதான் நம்முடைய வேதம்கூடச் சொல்கிறது!"

"வேதம் சொன்னால் சொல்லட்டும்; நான் சொல்ல மாட்டேன்!"

"சொல்லாவிட்டால் நீதான் கெட்டுப் போவாய்!"

"என்னைக் கெடுத்துவிட்டு அவன் மட்டும் நன்றாயிருந்துவிடுவானா? நன்றாயிருந்தால் இருக்கட்டும்; நான் வருகிறேன்!"

இப்படிச் சொல்லிவிட்டு அந்தக் கட்சிக்காரன் வெளியே வந்ததும், "உங்களுடைய குரலிலிருந்தே உங்களை நான் தெரிந்து கொண்டு விட்டேன்!" என்றான் கண்ணாயிரம், கொஞ்சநஞ்சமிருந்த சந்தேகத்தையும் அவனைப் பார்த்த பின் தீர்த்துக்கொண்டு.

கோவணாண்டி சிரித்தான். சிரித்துவிட்டு, "நீங்களும் இவரைப் பார்க்கத்தான் வந்தீர்களா?" என்றான், சுவரில் தன்னைப் பார்த்தும் சிரித்துக் கொண்டிருந்த காந்தி மகானின் படத்தைப் பார்த்தபடி!

"ஆமாம்; இவரைப் பார்க்கத்தான் வந்தேன். ஆனால் இனி பார்ப்பதாக இல்லை!" என்றான் கண்ணாயிரம், ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டவனைப் போல.

முருகையனுக்கு ஒன்றும் புரியவில்லை; "ஏன் அப்பா?" என்றான், இடையே குறுக்கிட்டு.

"படித்தது போதும், வா, இவருடைய வண்டியிலேயே நாமும் ஊருக்குப் போய் விடுவோம்!" என்றான் அவன், படியை விட்டுக் கீழே இறங்கிக்கொண்டே.

அதற்குமேல் முருகையன் அவனை ஒன்றும் கேட்கவில்லை. கேட்பதற்கு என்ன இருக்கிறது, 'படித்தவர்களின் லட்சண'த்தை அவனும் பார்த்தபிறகு?

# ராம்தீர்த் யோகாஷ்ரமத்தின் சில செயல்கள்



SHRI YOGIRAJ UMESHCHANDRAJI



## ராம்தீர்த் பிராமி ஆயில் – ஸ்பெஷல் நெ. 1

கூந்தல் தைலம், மூளைக்கு ஔஷதம், கண்களுக்கும் ஞாபக சக்திக்கும், ஆழ்ந்த நித்திரைக்கும் உடல் வலியைப் போக்குவதிலும், ராம்தீர்த் பிராமி ஆயில் யாவருக்கும், எக்காலத்தும் உகந்தது. கிடைத்தற்கரிய பலவித மூலிகைகளினால் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட ராம்தீர்த் பிராமி ஆயில் இப்பொழுது எல்லா இடங்களிலும் புதிய பாட்டிலில் கிடைக்கிறது.

**பெரிய பாட்டில் விலை ரூ. 4/-: சிறியது ரூ. 2/-**

எங்கும் கிடைக்கும்

**பலவித உன்னத மூலிகைகளினால் ராம்தீர்த் பிராமி எண்ணெய் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது**

யோகாசன வரைவு படம்

ஆரோக்யமாகவும், திடமாகவும் திகழ யோகாசனங்களை விவரிக்கும் எமது அழகான ஆசனப் படத்திற்கு எழுதுங்கள். ரூ. 2-50 மணியார்டர் அனுப்பி இப்படத்தைப் பெற்றுக்கொள்ளலாம். வீட்டிலிருந்தே ஆசனங்களைச் சுலபமாகப் பழகலாம்.

**யோகாசன வகுப்புகள்:** காலை 7-30லிருந்து 9-30 மணி வரையிலும், மாலையில் 5-லிருந்து 7-30 மணி வரையிலும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. பிரதி ஞாயிறுதோறும் காலை 10 மணிக்கு யோகாசன சொற்பொழிவுகள் உண்டு.

# ஸ்ரீ ராம்தீர்த் யோகாஷ்ரமம்

Phone: 62651 தாதர் - சென்ட்ரல் ரயில்வே - பம்பாய் - 14 Grams: PRANAYAM, Dadar - Bombay

ராம்தீர்த் பிராமி டெப்போ: 257, தங்கசாலைத் தெரு, சென்னை - 1

**நரஸூ** காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்



நரஸூ'ஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை

---

## நினைவில் இருக்க வேண்டிய பெயர்




பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

**நெருப்பு - கப்பல் - விபத்து**

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு
ஆஸ்திகள் ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
ஆமதாபாத், கோயமுத்தூர், கொச்சி

# கண்கள் உறங்காவோ?

## மாயாவி

### பூர்வ கதை

வீணு ஒரு பாலிய விதவை. அவள் தன் தந்தை சச்சிதானந்தம் முன்பு நிர்வாகியாகப் பணியாற்றிய காப்பூர் சமஸ்தானத்து மன்னர் தம்பதிகளால் வளர்க்கப் பட்டு, டாக்டருக்குப் படித்து விட்டுச் சொந்த ஊரான கேசவபுரத்துக்கு வருகிறாள். அவள் வர வேண்டிய ரயில் விபத்துக்குள்ளானதால் மகளைப் பறிகொடுத்து விட்டதாகச் சச்சிதானந்தம் கலங்கிக் கொண்டிருந்த போது, அவருடைய நண்பரான புஷ்பவனம் பிள்ளையின் மகன் சுந்தரம் அவளைச் சென்னையில் சந்தித்துத் தன் காரிலேயே ஊருக்கு அழைத்து வருகிறான்.

வீணுவின் வருகையால் யாவரும் மகிழ்ச்சியடைய அவளுடைய அத்தையும் மாமியாருமான தையலம்மாள் மட்டும் தன் மகனை விழுங்கியவள் என்று அவள்மீது குரோதம் கொள்ளுகிறாள். தையலம்மாளின் மகள் மாலா, சுந்தரத்தைக் காதலிக்கிறாள். ஊருக்கு வந்த அன்று சுந்தரம் மாலாவை ஆற்றங்கரையில் ரகசியமாகச் சந்திக்கிறான். அப்பொழுது அவர்களிடையே விதவைகளைப் பற்றிய விவாதம் எழுகிறது. மாலா விளையாட்டாக, "நீங்கள் மணந்து கொள்ளுவீர்களா ஒரு விதவையை?" என்று கேட்கிறாள். இது சுந்தரத்துக்கு ரோசத்தை உண்டு பண்ணுகிறது. அவன் மாலாவை மறந்து விதவையான வீணுவை மணந்து கொள்ள வேண்டுமென்று தீர்மானித்து விடுகிறான்.

கேசவபுரத்தின் கிராம முன்சீப் தாணுபதி ஓர் அசடு. அவன் கண்கள் வீணுவின் மீது விழுகின்றன. அவளை அடைய அவனும் திட்டங்கள் வகுக்கிறான்.

விதவைகளுக்குக் கிராமத்தில் விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகள் வீணுவை வியப்படையச் செய்கின்றன. இருந்தாலும் அவற்றுக்குத் தான் அடங்கி நடக்கவே விரும்புவதாக அவள் சுந்தரத்திடம் கூறி விடுகிறாள்.

—

## இரண்டாம் பாகம்

## மயக்கம்



சுந்தரம் கேசவபுரத்துக்கு 'அருகில்' உருவாகிக் கொண்டிருந்த புன்னூற்றுப் பாசன அணையில் பெருமாளை இன்ஜினியராக வேலை ஒப்புக் கொள்ளப் போகிறான். அணை ஸ்தலத்தில் ஒரு டிஸ்பென்ஸரி தொடங்கத் திட்டமிட்டிருந்தான். விஜுவும் அங்கே செல்லுகிறான். அவன் அங்கு காலேஜில் தன்னுடன் படித்த விகாஸ் என்ற இளைஞனைச் சந்திக்கிறான். அவனும் சுந்தரத்தைப் போலவே விதவைப் பெண்ணையே மணந்து கொள்ளுவதென்று தீர்மானித்து, அதற்காகவே பெற்றோரைப் பிரிந்து இங்கே வந்திருக்கிறான். ''இதெல்லாம் இளமைத் துடிப்பு. விதவைகள் மறுமணம் செய்து கொண்டு நிம்மதியாக வாழவே முடியாது'' என்று விஜு விகாஸிடம் கூறுகிறான். ஆனால் பிறகு அவன் அணையின் பிரதம இன்ஜினியர் குலசேகரத்தைச் சந்தித்தபோது, அவர் தாம் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே ஒரு விதவையை மணந்துகொண்டிருப்பதாகவும், ஆரம்பத்தில் சில காலம் சமூகம் தங்களைப் படாதபாடு படுத்தியதென்றாலும், இப்பொழுது அதையெல்லாம் மறந்து தமக்கு மற்றவர்களுக்கு உரிய அந்தஸ்து அளித்துள்ளதெனவும் அறிவிக்கிறார்.

இது விஜுவின் மனத்தைக் குழப்புகிறது; சுந்தரத்துக்கு ஊக்கமூட்டுகிறது; அந்த ஊக்கத்தில் அவன் பெற்றோர் மாலாவைத் தனக்காகப் பெண் கேட்கப் புறப்பட்ட போது வேலை காரியமாகும் வரையில் தான் திருமணத்தைப் பற்றி நினைக்க முடியாதென்று கூறி அவர்களைத் தடுத்து நிறுத்தி விடுகிறான். அதோடு எப்பாடு பட்டாவது விஜுவின் மனத்தைக் கரைத்து அவளையே மணந்து கொள்ள வேண்டுமென்று உறுதியும் செய்து கொள்ளுகிறான்.

## அத்தியாயம் 1

# எது கொடுமை?

விஜு கேசவபுரத்தில் ஆஸ்பத்திரி தொடங்கி ஒரு வாரம் ஆகிவிட்டது. ஆனால் அன்று வரையில் அவனிடம் வைத்தியத்துக்கென்று யாரும் வரவில்லை.

சாதாரணமாகக் கிராமங்களில் வாழ்பவர்கள் ஒரு தலைவலி, காய்ச்சல் என்றால் உடனே குப்பியைத் தூக்கிக் கொண்டு டாக்டரிடம் ஓடிவிடமாட்டார்கள். முதலில் கை மருந்திலே அதைக் குணப்படுத்திவிட முயலுவார்கள். அது பலனளியா விட்டால் நாட்டு வைத்தியரை நாடுவார்கள். அவரும் கையை விரித்து விட்டால்தான் ஆங்கில வைத்தியத்துக்குப் போவார்கள். விஜுவுக்கு இது தெரியும். ஆதலால் ஒரு வாரமாகியும் ஒரு நோயாளிகூடத் தன்னை நாடி வரவில்லையே என்று அவன் மனம் தளர்ந்து போய்விடவில்லை.

அவனுடைய ஆஸ்பத்திரி நேரம் காலை ஏழரை மணியிலிருந்து பத்தரை மணி வரையில் என்று நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அந்த மூன்று மணி நேரமும் அந்த வடக்குத் தெரு வீட்டில் தன்னந்தனியே 'காக்கை விரட்டிக்கொண்டிருக்க' நேரிட்டிருந்தால் ஒருகால் அவனுக்குச் சலிப்பு ஏற்பட்டிருக்கக் கூடும். ஆனால் அப்படி நேரிடவில்லை. சுந்தரத்துக்கும் பன்னிரண்டு மணியிலிருந்துதான் அணை ஸ்தலத்தில் வேலையாதலால், அவனுக்குக் காலையில் நிறையப் பொழுது இருந்தது. அனேகமாகத் தினந்தோறும் அவன் விஜுவுடன் ஆஸ்பத்திரிக்கு வந்து பேசிக் கொண்டிருப்பான். பத்தரை மணிக்கு அவன் வீடு திரும்பும்போதுதான் திரும்புவான். ஆகையால் வைத்திய வேலை இல்லாதிருந்த போதிலும் விஜுவுக்கும் பொழுது போவது சிரமமாக இருக்கவில்லை.

அவர்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசுவார்கள். அரசியல் செய்திகளிலிருந்து கிராமத்தின் அன்றாடச் செய்திகள் வரையில் அவர்கள் பேச்சில் அடிபடும். அணை ஸ்தலத்தில் விஜுவின் டிஸ்பென்ஸரி இன்னும் தொடங்கப்படவில்லை; எனவே பிற்பகலில் அவனுக்கு வேலை ஒன்றும் இருக்கவில்லை. பொழுது போவதற்காக அவன் மாலாவைத் துணைக்குக் கூட்டிக் கொண்டு ஊர் நெடுகச் சுற்றிப் பார்த்து விட்டு வருவான். நகரத்திலேயே வாழ்ந்து விட்ட அவனுக்கு இங்கே காணும் ஒவ்வொன்றும் புதுமையாக இருக்கும். அவற்றையெல்லாம் மறுநாள் சுந்தரத்திடம் சொல்லி வியப்பான்.

சுந்தரமும் சும்மா இருந்து விடவில்லை. தன் பெற்றோர் தொடங்க இருந்த திருமண முயற்சிக்கு முட்டுக்கட்டை போட்டு முதலில் தன் போராட்டத்துக்கு நிலைகளை அமைத்துக் கொண்டான். இப்போது போரைத் தொடங்குவதற்கு விஜுவைக் கட்சி சேர்க்க மெல்ல முயன்று கொண்டிருந்தான். ஆகையால் அவனுடைய பேச்சு பெரும்பாலும் அதற்கு ஏற்றவாறே இருந்தது. இருந்தாலும் விஜுவைப் போராட்டத்துக்குத் தயார் செய்யும் பணி அத்தனை சுலபமானதில்லை என்பது அவனுக்குத் தெரியும். கடந்த பதினைந்து நாள் பழக்கத்தில் அவன் சூசகமாகப் பலப்பல கூறியும் அவன் மனமானது புரட்சிகரமான முயற்சிகளைச் சிறிதும் ஆதரித்ததாகத் தெரியவில்லை.

ஆயினும் சுந்தரம் நம்பிக்கை இழந்து விடவில்லை. எப்படித் தன் மனம் ஒரு நாள், ஒரு விநாடியில், மாலாவின் ஒரே ஒரு சொல்லினால் அடியோடு மாற்றம் பெற்றதோ, அவ்வாறே வீணாவின் மனமும் ஒரு நாள் மாறும்; அதுவரையில் தனது பிரசாரத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருக்க வேண்டும் என்று அவன் துணிந்திருந்தான்.

எனவே, உரையாடலின் ஊடே எங்கு எங்கெல்லாம் சாத்தியமோ அங்கு அங்கெல்லாம் அவன் தனது பிரசாரப் பேச்சைச் சாதுரியமாக நுழைத்தான். அந்தப் பிரசார வேலைக்காக, இதர பிரசாரகர்கள் செய்வது போல் அவன் கற்பனையைக் கலந்து பேசவும் தயங்கவில்லை.

அன்றும் இப்படித்தான் அவர்கள் பேச்சு ஏதோ ஒரு விஷயத்தில் ஆரம்பமாயிற்று. முன்னாள் மாலையில் வீணா மாலாவுடன் குடியானவர் தெருவுக்குப் போயிருந்தாள். அங்கே அன்றிரவு ஒருவர் வீட்டில் திருமணம் நடக்கவிருந்தது. மணப்பெண் வெளியூர்க்காரி. அவளையும் அவளைச் சார்ந்தவர்களையும் மாப்பிள்ளை வீட்டார்கள் எல்லையில் சந்தித்து ஊர்வலமாக அழைத்து வந்து கொண்டிருந்தனர்.

வீணா இதுவரை கண்டிராத காட்சி இது. எனவே அவள் இன்று அதை வியப்புறும் குரலில் கூறி விட்டு, "மிஸ்டர் சுந்தரம்! எனக்கு அவர்கள் கலியாணச் சடங்கையும் பார்க்க வேண்டுமென்று ஆசை. ஆனால், 'திருமணம் இரவில்தான் நடக்கும்; அது வரையில் நாம் காத்திருக்க முடியாது' என்று கூறி மாலா என்னைத் திருப்பி அழைத்துக் கொண்டு வந்து விட்டாள்" என்றாள்.

சுந்தரம் சட்டென்று இந்தச் செய்தியைப் பிடித்துக் கொண்டான். "நல்லவேளை! நீங்கள் அந்தச் சடங்கைப் பார்க்கப் போகாமல் இருந்தீர்களே!" என்றான் அவன்.

" ஏன் போனால் என்ன, மிஸ்டர் சுந்தரம்?"

"போனால் உங்களை அங்கிருந்து வெளியேற்றி விட்டுத்தான் சடங்கை நடத்த முற்படுவார்கள்!"

"எனக்கு விளங்கவில்லையே! அவர்கள் திருமணச் சடங்கைப் பிறர் பார்க்கக் கூடாதா, என்ன?"

"பிறர் பார்க்கக் கூடாது என்பதில்லை. ஆனால் மணப்பெண்ணுக்குத் தாலி கட்டும் சமயத்தில் நீங்கள் அங்கே இருப்பதை அவர்கள் விரும்ப மாட்டார்கள். விளங்குகிறதா நான் சொல்வது?"

"ஓ! எங்களுக்கு அப்படி ஒரு கட்டுப்பாடு கூட இருக்கிறதா? கிராமாந்திரத்தில் எல்லா வகுப்பாருமே! இந்தப் பழக்கத்தைக் கடைப்பிடிப்பவர்கள்தானோ? சொல்லி வையுங்கள். இல்லாவிட்டால் நான்பாட்டுக்கு எங்கேயாவது கலியாணம்-கார்த்திகை என்று போய் விட்டு அவமானப்பட்டுக் கொண்டு வந்து நிற்கப் போகிறேன்."

" ஆமாம், கிட்டத்தட்ட எல்லா வகுப்பாருமே அப்படித்தான். பின் என்ன? அறிவில் உயர்ந்தவர்கள்; வகுப்பில் உயர்ந்தவர்கள்; வாழ்வில் உயர்ந்தவர்கள் என்று மார்தட்டிக் கொள்ளும் நம்மிடையிலேயே வாழ்விழந்தவர்களுக்கு விசித்திரம் விசித்திரமான கட்டுப்பாடுகள் இருக்கையில், அதிகமாகக் கல்வி அறிவோ, உலக அறிவோ அற்ற அந்தப் பாமர மக்களிடம் இப்படி ஒரு குருட்டு நம்பிக்கை இருப்பதில் வியப்பு என்ன இருக்கிறது?"

" குருட்டு நம்பிக்கையா?"

" ஆமாம்! அதிர்ஷ்டம் கெட்ட பெண்களின் கண்பட்டால் தங்கள் மணப்பெண்களும் அதிர்ஷ்டம் கெட்டவர்கள் ஆகிவிடுவார்கள் என்று நம்புகிறார்கள்."

சுந்தரம் கூறியது முற்றிலும் கற்பனையே. உண்மையில் இப்படி ஒரு கட்டுப்பாடோ, நம்பிக்கையோ குடியானவ மக்களிடையே கிடையவே கிடையாது. ஆயினும் அவன் இப்படித்தான் தன் கட்சிக்குப் பலம் சேர்க்க ஏது எதையோ கற்பனை செய்து கூறி வந்தான்.

வீணாவின் மனமும் இதைக்கேட்டதால் குறிப்பிடும்படியான அதிர்ச்சியொன்றும் அடைந்துவிடவில்லை. இந்தப் பதினைந்து நாட்களில் தான் அறிந்து கொண்ட கிராமாந்திரத்தின் இதர பழக்க வழக்கங்களைப் போல் இதையும் சாதாரணமாகவே எடுத்துக் கொண்டாள்.

ஆனால் அவளுக்கு வேதனையூட்டும் சம்பவம் ஒன்று உடனே நிகழ்ந்து விட்டது.

அவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கையில், வாசலில் சதங்கைகள் ஒலிக்க வில் வண்டி ஒன்று வந்துநின்றது. வண்டியை ஓட்டி வந்த நாணுவதி அதிலிருந்து குதித்து, "டாக்டர் அம்மா! டாக்டர் அம்மா!" என்று கூவியவாறு உள்ளே ஓடி வந்தான். "கிளம்புங்க. சட்டுனு மருந்துப் பெட்டியை எடுத்துக் கிட்டுக் கிளம்புங்க" என்று பதறிய குரலில் கூறினான் அவன்.

" என்ன மிஸ்டர் நாணுவதி? யாருக்கு என்ன?" என்று கேட்டாள் வீணா.

" நம்ம சப்பாணியின் மகளைப் பாம்பு கடிச்சுடுச்சு. ஏ எங்கையா! வாயிலே இருந்து நுரைநுரையாக் கக்குது. நான்

சொல்றது நெசந்தான் டாக்டர் அம்மா. புறப்படுங்க டாக்டர் அம்மா!"

"யார் ஐயா அது சப்பாணி என்பது?" என்று சுந்தரம் வினவினான்.

"அட, நீங்க பேசாமல் இருங்க ஐயா! ஒங்களுக்கு இந்த ஊரிலே யாரைத் தெரியும்? டாக்டர் அம்மாவுக்குத் தெரியும் அவங்களே."

வீணா விழித்தாள். அவளுக்குத் தெரிந்தவனா? யார் அப்படி ஒரு சப்பாணி?

"என்ன நின்னுக்கிட்டிருக்கிறீங்க, டாக்டர் அம்மா? புறப்படுங்க சுருக்க. பாவம், நேத்துத்தான் தாலி கட்டிக்கிட்ட அந்தப் பொண்ணு இன்னைக்குத் தாலியை அறுத்துப் போட்டு நிற்கிறதா? கிளம்புங்க. மருந்துப்பெட்டியை எங்கே வைச்சிருக்கிறீங்க, சொல்லுங்க; நான் தூக்கிக்கிட்டு வாரேன்."

"ஓ! நேற்று குடியானவர் தெருவிலே ஒரு கலியாணம் நடந்ததே. அந்தப் பையனா? அட பாவமே!" வீணாவின் முகத்தில் வேதனை படர்ந்தது.

"ஆமாம்! ஆமாம்! நீங்க கூடப் பெண் வீட்டுக்காரங்க ஊர்கோலம் வந்துக்கிட்டு இருக்கிறப்போ பார்த்துக்கிட்டு இருந்தீங்களாமே!"

வீணாவுக்குச் சட்டென்று ஓர் அதிர்ச்சி. சற்று முன் சுந்தரம் விமரிசித்த அந்தப் பாமர மக்களின் குருட்டு நம்பிக்கைதான் பலித்து விட்டதா? அதிர்ஷ்டம் கெட்ட தன் கண் அந்த மணப்பெண்மீது பட்டதால்தான் அவளுடைய வாழ்வு கருகும் நிலை ஏற்பட்டு விட்டதா?



இருந்தாலும் இந்த அதிர்ச்சி மறு நிமிஷமே அவளிடம் ஓர் ஆவேசத்தைக் கிளப்பியது. எப்படியாவது அந்தப் பெண்ணின் கணவனைப் பிழைப்பூட்டி விட வேண்டும்.

அவள் அருகிலிருந்த அலமாரியிலிருந்து தனது மருந்துப்பெட்டியை வேகத்துடன் எடுத்துக் கொண்டாள். "இறைவா! இது இந்த ஊரில் என் முதல் கேஸ். அதுவும் என்னாலேயே நிகழ்ந்து விட்டதோ என நினைக்கும்படியான கேஸ். இதில் நான் எப்படியாவது வெற்றிபெற வேண்டும் செந்திவேல் முருகா!" என்று அவள் உள்ளம் பிரார்த்தித்தது. "சரி, மிஸ்டர் சுந்தரம்! நான் போய் வருகிறேன்" என்று அவள் கிளம்பினாள்.

சுந்தரம் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி எட்டரைதான் ஆகியிருந்தது. "நானும் வருகிறேன், வீணா! என் காரிலே போய் வரலாம்" என்று அவனும் எழுந்தான்.

இதைக் கேட்டதும் முன்னால் நடந்து கொண்டிருந்த நாகுவதி சட்டென்று நின்று திரும்பினான். "காரா? அது எதுக்கு ஒண்ணு! நம்ம வண்டியைவிட சல்லியாப் போயிடுமோ உங்க காரு?"

வீணாவுக்கு நிறையக் கேஸ்களைப் பிடித்துக் கொடுத்து அவளுடைய நன்மதிப்பைப் பெற்று, அதன் மூலம் அவளை அடையத் திட்டமிட்டிருந்தான் நாகுவதி. இதற்காக அவன் ஆஸ்பத்திரியைத் தொடங்கிய நாளிலிருந்து அவன் ஊரெல்லாம் சுற்றி எந்த வீட்டில் யார் நோயுற்றிருக்கிறார்கள் என்பதைத் தீவிரமாக விசாரித்து வந்தான். துரதிர்ஷ்டவசமாகக் கடந்த ஏழு நாட்களாக அவன் கண்களில் ஒரு நோயாளி கூடப் படவில்லை. இன்று அவன் தற்செயலாகக் குடியானவர் தெருப் பக்கம் போயிருந்தபோது நேற்று மணமான இந்தப் பையனைப் பாம்பு கடித்து விட்ட செய்தியை அறிந்தான். அந்த இளைஞன் மாடுகளுக்குத் தீவனம் போடுவதற்காகப் போயிருந்து வைக்கோல் பிடுங்கிக் கொண்டிருந்தபோது கருநாகத்தால் தீண்டப்பட்டு விட்டானாம். குடியானவர்கள் விஷம் இறக்கும் மந்திரவாதிக்கு ஆள் அனுப்பி விட்டு, அவர் வருகையை எதிர்நோக்கிக் கொண்டிருந்த போதுதான் நாகுவதி அங்கே வந்து சேர்ந்தான். "மந்திரமும் வேண்டாம்; மாயமும் வேண்டாம். நம்ம ஊரிலே டாக்டரம்மா ஒருத்தி ஆஸ்பத்திரி தொடங்கியிருக்கிறாங்க. அவங்களைப் போய்க் கூட்டிக்கிட்டு வாரேன்" என்று கூறி, அவர்கள் சம்மதத்தைக் கூட எதிர்பாராமல் தலை தெறிக்க ஓடிவந்தான்.

வரும் வழியில் அவனுக்கு வேறோர் எண்ணமும் பளிச்சிட்டது. அன்றொரு

தான் அவன் தனது வண்டியோட்டும் சாமர்த்தியத்தை விஜயாவுக்குக் காட்டி அவளிடமிருந்து 'சபாஷ்' பட்டம் பெற வேண்டுமென்று நினைத்தான். ஆனால் அன்று எந்தப் பயலோ அவன் மண்டையை உடைத்துவிட்டபடியால் அந்த வாய்ப்பு கிட்டாமல் போய்விட்டது. இப்பொழுது விஜயாவைக் குடியானவர் தெருவுக்கு அழைத்துச் செல்ல வண்டி கட்டிக் கொண்டு போய் அவளுக்குத் தனது சாமர்த்தியத்தைக் காட்டலாமே! இந்த நினைவோடுதான் அவன் இப்போது வண்டிகூடக் கட்டிக் கொண்டு வந்திருந்தான். இவ்வளவு ஆலோசனையோடு அவன் காரியம் செய்திருக்கையில், அதை இந்தப் புஞ்சவன மாமாவின் மகன் கெடுக்கப் பார்க்கிறான்! அவனைச் சும்மா விட்டுவிடுவானா தாணுவடி?

அவன் சுந்தரத்துடன் பெரிதாகச் சண்டை போட ஆரம்பித்துவிட்டான். "நீ யார் ஐயா, என் காரியத்திலே குறுக்கே வந்து விழ? நான் டாக்டரைக் கூட்டிக்கிட்டுப் போக வேலை மெனக் கெட்டு வண்டி கொண்டாந்திருக்கேன். இவரு காரிலே கூட்டிக்கிட்டுப் போறாராமில்லே, காரிலே! அப்படி என்ன ஐயா, ஒசத்தி உன் காரு? என் மயிலே ஒன்னையின் வாலிலே கட்டி அடிக்க வருமா ஐயா, உன் காரு?...." என்று ஏதேதோ உளற ஆரம்பித்து விட்டான்.

சுந்தரத்துக்குத் தாணுவடி ஒரு பைத்தியம் என்று தெரியுமாதலால் அவன் எதிர் வாதம் எதுவும் செய்யவில்லை. முறுவலுடன் விஜயாவின் முகத்தை நோக்கினான்; ஆபத்துக்குப் பாவமில்லை என்றுதான் விஜயாவும் தாணுவடியுடன் வண்டியில் போகத் துணிந்தாள். ஆனால் இப்போது சுந்தரமே தன் பொருட்டுக் காரை எடுத்துக் கொண்டு வருவதாகக் கூறி விட்ட பிறகு அவள் இந்தக் கயவனுடன் செல்ல விரும்புவாளா? ஆகையால் அவள் தாணுவடியின் பேச்சில் புகுந்து தான் சுந்தரத்தின் காரில்தான் வரப் போவதாக அறிவித்து அவன் வாயை அடக்கிவிட்டு, "வாருங்கள், போகலாம். எனக்கு அந்தக் கலியாண வீடு தெரியும்" என்று சுந்தரத்தின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு கிளம்பி விட்டாள்.

தாணுவடியின் ஆத்திரம் முழுவதும் சுந்தரத்தின் மீது சாய்ந்தது. "சே, சே! பூனை வேலியிலே காயுது புறத்தாப்பிலே இந்தப் பயலில்லா குறுக்கே விழுந்து நம்ப காரியத்தைக் கெடுத்துக்கிட்டிருக்கிறான். இவனே வசம் பார்த்துப் பொட்டியிலே நடடி அடக்கி ஒடுக்கணுமே!" என்று கறுவிக் கொண்டு தோள் துண்டைத் தீப்பாளையாகச் சுற்றியவாறு வண்டியிலேறிக் கொண்டான். ஆனால் அவன் வண்டியைக் குடியானவர் தெருவை நோக்கி ஓட்டவில்லை. நேரே தன் வீட்டுக்கே திருப்பி ஓட்டினான். ஆமாம்! இனிமேல் அந்தச் சப்பாணியின் மகன் இருந்தால் என்ன? செத்தால் என்ன அவனுக்கு? அவன் ஆசைதான் மண்ணோடு மண்ணாகிவிட்டதே!

அவர்கள் அந்தக் குடியானவனின் வீட்டை நெருங்கியபோது அங்கிருந்து அழுகுரல்தான் எதிரொலித்தது. இருந்தாலும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள விஜயா காரிலிருந்து அவசரம் அவசரமாக இறங்கி உள்ளே சென்று



அந்த இளைஞனின் கையைப் பிடித்து நாடித் துடிப்பைச் சோதித்தாள். அவன் இறந்தவன் இறந்தவனே!

கணவனின் உடல்மீது விழுந்து கதறிக் கொண்டிருந்த புது மணப்பெண்ணை விஜயா பரிதாபத்துடன் நோக்கினாள். ஒருநாள், ஒரே இரவுடன் அவளுடைய இன்பமெல்லாம் முடிந்து விட்டது. நேற்று கழுத்தில் ஏறிய பொற்சரடு இன்று பறிக்கப்பட்டு விட்டது. நேற்று அவள் தலையில் சூடிக்கொண்ட மலர்கள் வாடவில்லை; அதற்குள் அவள் வாழ்வு வாடிவிட்டது. நேற்று அவள் இட்டுக் கொண்ட திலகம் அழியவில்லை; அதற்குள் அதன் மங்கலத் தன்மை அழிந்து விட்டது. நேற்று அவள் உடுத்துக் கொண்ட புதுச் சேலை கசங்கவில்லை. அதற்குள் அவள் கசங்கிவிட்டாள். இனி



மின்சார உதவி எஞ்சினீயர் திரு ஏ. சுந்தரம் அவர்களின் புதல்வி சௌ. எல். வசந்தாவை, திரு எல். கே. ராமலிங்கம் பி. ஈ. சமீபத்தில் மணந்தார்.



கவி சுப்பிரமணிய பாரதியாரின் சகோதரர் திரு விசுவநாதய்யரின் குமாரர் திரு சுப்பிரமணியன் பி. ஈ.க்கும் சௌ. மீனாட்சிக்கும் திருமணம் நடந்தது.

அவள் மணமற்ற மலர்! சுவையற்ற கனி! ஒளியற்ற விளக்கு!

உயிரையே வெளிக்கொண்டு வந்து விடுவதுபோல் அந்தப் பெண் கதறிய கதறலைக் காணப் பொறாமல், அவளைத் தேற்றும்பொருட்டு வீணா மெல்ல அவள் தலையை நிமிர்த்தினாள். அந்தப் பெண் பித்துப் பிடித்தவள் போல் வீணாவின் முகத்தைக் கணநேரம் கூர்ந்து நோக்கினாள். பிறகு, "ஐயோ! என்னையும் உன்னை மாதிரி ஆக்கிட்டதே தெய்வம்!" என்று அலறியவாறு மீண்டும் கணவனின் மார்பின்மீது முகத்தைப் புதைத்துக் கொண்டு ஓரேயடியாகக் கதறினாள்.

வீணாவின் கண்களிலிருந்து பொலபொலவெனக் கண்ணீர் உதிர்ந்தது. நல்லவேளை, சுந்தரம் அவளை மெல்லக் கிளப்பிக் காருக்கு அழைத்து வந்துவிட்டான். இல்லாவிட்டால் கணவனைப் பறிகொடுத்த அந்தக் குடியானவப் பெண்ணுக்கு இணையாக வீணாவும் அங்கே அழுது கதறி யிருப்பாள்!

ஆஸ்பத்திரிக்குத் திரும்பி வரும் வரையில் அவர்கள் ஒன்றும் பேசிக்கொள்ளவில்லை. ஆஸ்பத்திரிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்ற வீணா தொப்பென்று தன் நாற்காலியில் சாய்ந்து, "முடிந்து விட்டது! உலகில் மற்றொரு பெண்ணின் வாழ்வு முடிந்து விட்டது!" என்று அரற்றினாள்.

"முடிந்தால் தேவலாமே? இனித்தானே அவள் வாழ்வின் துன்பப் பகுதி ஆரம்பமாகப் போகிறது!" என்றான் சுந்தரம், எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்தவாறு.

வீணா அவனை விழித்துப் பார்த்தாள்.

"என்னை ஏன் விழித்துப் பார்க்கிறீர்கள்? மூக்கறுந்தவன் கதை தெரியுமா உங்களுக்கு? ஒருகால் அவளுடைய உணர்ச்சி உங்களுக்கும் ஏற்பட்டு விட்டதா?"

"சுந்தரம்!" என்று வீறிட்டாள் வீணா.

அவளுடைய வீரிடல் அவனுடைய வேகத்தை அதிகப்படுத்தியது. "இதைத்



மத்திய அரசாங்க வெளிநாட்டு இலாகா உதவிக் காரியதரிசி திரு எம். வெங்கடாசலமய்யர் குமாரர் திரு மகாதேவன் சௌ. மாலினியை மணந்தார்.



நாகப்பட்டினம் திரு. வி. ஆர். ராஜகோபாலன் அவர்களுக்கும் சௌ. ரங்கநாயகிக்கும் வெகு சிறப்பாக விவாகம் நடைபெற்றது.



பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்டைச் சேர்ந்த திரு கே. வி. ராமநாதனுக்கும் செள. ராஜலக்ஷ்மிக்கும் கல்கத்தாவில் சிறப்பாகத் திருமணம் நடந்தது.



ஜூபிடர் பிக்சர்ஸ் உரிமையாளர் திரு எம். சோமசுந்தரத்தின் புதல்வி திருமதி சுலோசனா பி. ஏ.க்கும் திரு மாணிக்கம் அவர்களுக்கும் திருமணம் நடந்தேறியது.

தானே நீங்கள் விரும்புகிறீர்கள்? இப்படி விதியின் கொடுமையால் வாழ்க்கை விளக்கு அவிந்தபோது, அதை மீண்டும் ஏற்றவிடாமல் இருளிலே ஆழ்ந்து விடப்படுவதுதானே உங்களுக்கும் உங்கள் சமூகத்துக்கும் ஏற்றதாக இருக்கிறது. நினைத்துப் பாருங்கள் வீணா, எது கொடுமை என்று-நாங்கள் செய்ய விரும்புவதா? அல்லது உங்கள் சமூகம் செய்து கொண்டிருப்பதா? நினைத்துப் பாருங்கள், எது அநீதி என்று-நாங்கள் கூறுவதா? அல்லது உங்கள் சமூகம் கூறிக் கொண்டிருப்பதா? ஆலோசித்துப் பாருங்கள் வீணா எது அக்கிரமம் என்று-நாங்கள் அவிந்த விளக்கை மீண்டும் ஏற்ற முயல்வதா? அல்லது உங்கள் சமூகம் அதை ஏற்றவிடாமல் உங்களை இருளிலே ஆழ்த்திக் கொண்டிருப்பதா?"

"போதும் சுந்தரம், போதும்! நிறுத்துங்கள்!"

"நிறுத்தி விட்டேன். நான் அநுபவித்தும் உணராத, கண்ணாரக் கண்டும் கலங்காத உங்களைப் போன்றவர்களிடம் இதை விவாதித்து என்ன பயன்?"

"என்னைச் சொல்லால் கொல்லாதீர்கள். நான் விடும் இந்தக்கண்ணீர்..."

சுந்தரம் சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து அவளை இடைமறித்தான்: "ஆம், இந்தக் கண்ணீர் கண்ணிலிருந்து வரும் வெறும் தண்ணீர். அது என்று நெஞ்சிலிருந்து கொட்டும் உதிரமாக மாறுகிறதோ, அன்றுதான் நீங்கள் மாறுவீர்கள்; உங்கள் மனம் மாறும்; இந்த உலகமும் மாறும். வருகிறேன் நான்." அவன் நிற்கவில்லை; 'விர்'ரென்று வெளியே நடந்தான்.

வீணாவுக்கு அவனை நிறுத்தத் துணிவு வரவில்லை. அந்த நினைவுகூட அவளுக்குத் தோன்றவில்லை. அவள் ஒரு மயங்கிய நிலையில் இருந்தாள். "எது கொடுமை? எது அநீதி? எது அக்கிரமம்?" என்ற கேள்விகள் ஆயிரம் ஆயிரம் குரல்களில் அவளைச் சுற்றி எங்கும் எதிரொலித்தன. (தொடரும்)



திரு ஆர். வெங்கடேசன் அவர்களின் குமாரர் திரு வி. இராஜாமணிக்கும் செள. கோகிலாம்பாளுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



உடயா அச்சகத்தில் பணிபுரியும் திரு நாஸ் திருமதி ஜெயலக்ஷ்மியைக் கன்னியா குமரியில் சமீபத்தில் மணம் புரிந்து கொண்டார்.

வியாருமச் செல்லும் வழியில் ஒரு வள்ளியூர் இருக்கிறது. அங்கு வள்ளி பிறந்து வளர்ந்ததாக வரலாறு இல்லை. திருச்செந்தூரில் வள்ளி ஒளிந்த குகை ஒன்று இருக்கிறது. திருச்செந்தூரில் முருகன் நிகழ்த்தியது, சூரசம்ஹாரம். அதற்குப் பரிசாக, தேவேந்திரனிடம், அவன் மகள் தேவசேனையையம்மனையாகப் பெற்றது திருப்பரங்குன்றத்திலே. மேலும் வள்ளியைக் கண்டு மையல் கொண்டு, அவள் தந்தை தமையன் முதலியோரைக் கண்டு ஒரு ஒளிந்தவன் முருகனே தன். முருகனைக் கண்டு வள்ளி ஒளிந்ததாகப் புராணக் கதை ஒன்றும் இல்லை. ஆதலால் 'மயில்மேவு மாயக் குறமாதான' வள்ளியைத் திருநெல்வேலி ஜில்லாவாசிகள், தங்கள் நாட்டுக்காரி அவள் என்று உறவு கொண்டாட முடியாதுதான்.



வள்ளிமலைக் கோவில்

ஆதலால் 'முற்றும் பசுங்கதிர் செவ்வேனல் காத்த அந்த நீல வள்ளி,' அவள் பெயராலே வழங்குகின்ற வள்ளிமலையைச்சேர்ந்தவளாகத் தான் இருத்தல் வேண்டும். தெய்வ மகளான தேவசேனையை மணந்தபின், தணிகை சென்று அமைதியாகக் குடும்பம் நடத்த விரும்பிய அந்த அருள் ஞானசக்திதரனிடம் ஒரு காதற் கைகதையே ஆரம்பித்து வைக்கிறார் நாரதர். 'தேனென்று பாகென்று உவமிக் கொணாத் தெய்வ வள்ளி' அவள் என்று ஆசையையே மூட்டுகிறார். அதோடு, அவள் தணிகைக்கு அணித்தே உள்ள மலையில் வாழ்பவள் என்றும் சொல்கிறார். அவ்வளவுதான்; புறப்பட்டு விடுகிறான் முருகன். கால் கடுக்க நடந்தே செல்கிறான். வேட்டுவப் பெண்ணை மணக்க விரும்பிய குமரன் வேடனாகவே வேஷம் போடுகிறான். வேட்டையாடி வந்த மானைத் தேடிவரும் வில்லனாக (வில்லை ஏந்தியவனாக) தினைப்புனம் காக்கும்வள்ளியை அணுகுகிறான். அவளிடம் காதல் மொழி பேசுகிறான். அவள் கோபித்து, தந்தையையும் தமையன்மாரையும் அழைத்தபோது, அங்கேயே வேங்கை மரமாக நிற்கிறான். பின்னர், அவளது தந்தையாம் நம்பிராஜனிடமே எக்குள் போட்டு, விருத்தனாக மாறி, கள்ளச் சிறுமியாம் வள்ளியை வேட்கிறான். அதுவும் பலன் தராது கண்டு தன் சகோதரன் விநாயகனையே தொழுது, யானையைக் காட்டும் பயமுறுத்தி, அவள் தன்னைக் கட்டித் தழுவச் செய்கிறான். பின்னர், தன் மெய்யுருவை அவளுக்குக் காட்டி, அவளை மணம் புரிந்து கொள்கிறான். இப்படித்தான் திருத்தணிப் பதியில் வாழும் முருகன், குறமகள் மருவிய பெருமானாக மாறுகிறான். ஞான சக்தியாகிய வேலேந்திய குமரன், கிரியா சக்தியான தெய்வயானையை மணந்தபின், இச்சா சக்தியான வள்ளியையும் மணந்து கொள்கிறான் என்று சொல்லுவது பொருத்தம்தானே?

இந்த வள்ளி பிறந்து வளர்ந்த இடம்தான் வள்ளிமலை. வள்ளிக்கிழங்கு தோண்டி எடுத்த இடத்தில் மகாலக்ஷ்மியின் அவதாரமான மான் வயிற்றிலே பிறக்கிறாள். அதனும் அவளைத் தேடி எடுத்த நம்பிராஜன் என்னும் வேடுவர் தலைவன், அவளை வள்ளி என்றே அழைக்கிறான். இந்த "வள்ளியூடா சாரல் வள்ளிமலை" சென்று வள்ளியை மணக்கிறான் அந்த வள்ளி மணவாளன் என்று அருணகிரிநாதர் அறுதியிட்டு உரைக்கிறார். இந்த வள்ளி மலை இன்று இருப்பது ஆந்திர ராஜ்யத்திலே. சென்னை ராஜ்யத்திலே உள்ள வட ஆற்காடு மாவட்ட எல்லையிலிருந்து எட்டிப் பிடிக்கும் தூரத்திலேதான் இருக்கிறது. சென்னை பங்களூர் ரோட்டில் பொன்னையாற்றின் கரையில் உள்ள திருவலம் என்னும் தலத்திலிருந்து வடக்கே பத்து மைல் தொலைவில் இருக்கிற சிறிய ஊர். திருத்தணிகைக்கு நேர் மேற்கே இருபது மைல் தூரத்தில் இருக்கும். மிக்க சிரமம் இல்லாமல், நல்ல ரோட்டிலே காரிலோ, பஸ்ஸிலோ இந்தக் கிராமத்துக்குச் சென்று சேரலாம். அடிவாரத்திலே இருக்கும் உற்சவமூர்த்தியைக் கண்டு வணங்கலாம்.

"இந்த உற்சவ மூர்த்தியைக் காணவா இவ்வளவு தூரம் வந்தோம்? ஏதோ வள்ளி பிறந்த ஊர். வள்ளி தினைப்புனம் காத்த தலம் என்றெல்லாம் விளம்பினீரே!" என்று நீங்கள் கேட்பது எனது காதில் விழத்தான் செய்கிறது. அந்த வள்ளியை நல்ல கல்லுரு

# படித்துப் பாருங்கள்

## கணபதி

சைவமும் தமிழும் தழைக்க, திருவாவடுதுறை ஆதீனம் எத்தனை எத்தனையோ அரும் பெருந் தொண்டுகளை ஆற்றி வருகிறது. ஆன்மிக நோக்கம் வளரவும், பக்திமார்க்கம் பரவவும் மேற்படி ஆதீனம் ஆற்றியிருக்கும் தொண்டு அளப்பரியவையாகும். சாஸ்திரத் துறையிலும் ஆதீனம் ஈடுபட்டு, சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கையும் தனித் தனியாகப் பழைய உரைகளுடன் வெளியிட்டிருப்பதைத் தமிழகம் என்றும் மறக்காது.

இப்பொழுது கணபதியைப் பற்றி இவ் வாராய்ச்சி நூல் வெளிவந்திருக்கிறது. உலகம் முழுவதும், கடல் கடந்த பிரதேசங்களிலும் கூட விநாயகர் வழிபாடு அநாதிகாலந் தொட்டு இருந்து வருகிறது. நம் நாட்டினர் எந்தக் காரியம் செய்தாலும் கணபதியை வணங்கி விட்டுச் செய்வது நம் மரபு. பல்லாயிரக் கணக்கான பாடல்கள் கொண்ட ஒரு புராணம் இயற்றுவதானாலும் சரி, பத்துப் பாடல்களைக் கொண்ட ஒரு பதிகம் இயற்றுவதானாலும் சரி, விநாயகப் பெருமான்மீது காப்புச் செய்யுள் ஒன்று இயற்றிவிட்டுத்தான் நூலைத் தொடங்குவார்கள், புலவர்கள். அதேபோல், திருமணம், புதுமனை புகுதல் முதலிய மங்கலச் சடங்குகள் தொடங்குவதற்கு முன்பும் கணபதி பூஜை செய்வது நெடுங்காலமாக நேர்ந்து வரும் வழக்கம்.

இந் நூலில் கணபதி வழிபாட்டு முறை, கணபதியின் எண்ணற்ற பெயர்களும் அவற்றுக்கான காரணங்களும், திரு உருவத் தத்துவம், வரலாற்று முறையால் அறியப்படும் உண்மைகள் ஆகியவைகளெல்லாம் ஆராய்ச்சித் திறனுடன் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. கண்ணையும், கருத்தையும் கவரும் விநாயகப் பெருமானின் வண்ண ஓவியங்கள் இந் நூலில் நிறையக் காணப்படுகின்றன.

திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த எழுத்தாணியைச் ஸ்ரீ பஞ்சாக்ஷர விநாயகர் ஆலய மகா கும்பாபிஷேக மலராக இந் நூல் வெளியிடப்பட்டிருக்கிறது.

## முருகன்

தமிழ்க் கடவுளாகிய முருகனைப் பற்றிய எல்லா விவரங்களையும் அறிய வேண்டுமானால் திருவாவடுதுறை ஆதீனத்தார் வெளியிட்டிருக்கும் சிறந்த சஷ்டி மலரைத் தவிர வேறு எந்தப் புத்தகத்தையும் படித்துவிட முடியாது. இப்படி வரையறை செய்து புகழத்தக்க விதத்தில் அழகாகவும் அருமையாகவும் 'முருகன்' நூலை வெளியிட்டிருக்கிறார்கள் ஆதீனத்தார்.

முருகப் பெருமானின் பல்வேறு வகைத் திருவுருவங்கள், தமிழ் நூல்களில் முருகனைப் பற்றி வரும் கருத்துக்கள், முருக தத்துவம், முருக வழிபாடு முதலிய யாவற்றையும் தெள்ளத் தெளிய விவரித்து விளக்குவதுதான் இந்த நூலின் தனிப்பெருமை. இருபதுக்கு மேற்பட்ட தமிழ் நூல்களையும், சில வடமொழி நூல்களையும் மேற்கோள்களாகக் காட்டியிருப்பது நூலின் பெருமையைக் காட்டுகின்றது. இம்மாதிரி ஒரு நூலைச் சாதாரணமாக வெளியிடுவதற்கு எவ்வோராலும் முடியும். ஆனால் உயர்தரமான சித்திரங்களுடன் சிறப்பான தாளில் அழகாக வெளியிடும் மேலான காரியத்தைத் திருவாவடுதுறை ஆதீனத்தாரால்தான் செய்ய முடியும். ஆதீன கர்த்தரான குரு மகா சந்நிதானத்தின் பிறந்த நாளன்று இந் நூல் வெளியாகிறதென்பது மகிழ்ச்சிதரும் செய்தி. இம்மாதிரியே இன்னும் பல சிறந்த நூல்களை வெளியிட்டுப் புகழ் பரப்பவேண்டுமென்று வாழ்த்தத் தோன்றுகிறது. 'முருகன்' நூலை உருவாக்கியது பற்றிய விவரங்களை இனியதொரு முன்னுரையாக அளித்துள்ளார் ஆசிரியர் தண்டபாணி தேசிகர். முருக பக்தர்கள் எப்போதும் கையில் வைத்துப் போற்றுவதற்கேற்ற நல்ல வெளியீடு என்று மனமாரப் பாராட்ட வேண்டிய நூல்.

சைவ நெறியாகிய தெய்வ நெறியைப் பரப்பும் தொண்டை மேற்கொண்டு குரு மகா சந்நிதானம் செய்து வரும் இத்தகைய அரும் பணிகள் பாராட்டுக்கு உரியவை.

இவ்விரண்டு நூல்களும் திருவாவடுதுறை ஆதீன வெளியீடுகள்.

## புண்டரீக புரேசஸ்தவம்

கேரள நாட்டின் பிரதான திவ்ய க்ஷேத்திரமான வைக்கம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் மீது எழுத்தூர், கோமதிதாச ராமஸ்வாமிசாஸ்திரியார் அவர்கள் பக்திபூர்வமாக இவ்வரிய துதி நூலை வடமொழியில் இயற்றியிருக்கிறார். வடமொழியில் பல அரிய நூல்களை இயற்றி அரும்புகழ் பெற்று விளங்கிய கோமதிதாசர் கேரளம் கண்டெடுத்த மகா வித்வான்களுள் ஒருவர். அவருடைய வாக்கு நயத்தை இச் சிறு நூலில் பல இடங்களில் காணமுடிகிறது.

பிரசுரித்தவர்: ஆர். நரசிம்ம சுப்ரமணி, 14, பிராமணத் தெரு, சைதாப்பேட்டை, சென்னை—15.

## சுடர் ஒளிகள்

இமயமலையைப் பார்த்தவர்கள் ஏராளமாக இருப்பார்கள். ஆனால் அம்மலையைப் பற்றிய விசேஷங்களையும், விவரங்களையும் அறிந்தவர்கள் மிகச் சிலரே இருப்பார்கள். அது போலப் பேரறிஞர்கள், பிரமுகர்கள் இவர்களைப் பற்றி நன்கு அறிந்தவர்கள் காணக் கிடைப்பது துர்லபம்.

நம் எல்லோருக்கும் தெரிந்த பிரமுகர்களைப் பற்றி இந்நூலில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டிருக்கிறது. மேற்படி விவரங்கள் சுருக்கமாயிருப்பினும் முக்கியமான விஷயம் எதுவும் விடப்படவில்லை.

எழுதியவர்: த.நா.ரா.; பிரசுரம்: மாலை பதிப்பகம், சதர்ன் அவென்யூ, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-18; விலை: 40 ந.பை.

93

மக்களே போல்வர்
கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்டது இல்.

கயவர் - வஞ்சனைக்காரக் கீழ்மக்கள்

இவர்கள் வடிவால் மக்களைப் போலவே இருக்கிறார்கள். ஆனால் இவர்கள் மனிதப் பிறவியேயல்ல. இந்த "ஒப்பாரி"யைப்போல் வேறு ஒப்பாரியை நாம் கண்டதில்லை.

ஒப்பாரி—ஒன்றைப் போலவே வடிவத்தில் மற்றொன்று இருந்தும் குணத்தில் மிக வேறுபட்டிருக்கும் இரு பொருள்கள். — புலியும் பூனையும், எள்ளும் பேயெள்ளும், பன்றியும் பெருச்சாளியும், குதிரையும், கழுதையும், கரும்பும் பேய்க்கரும்பும்—முதலியனபோல். இவை எல்லாவற்றையும் விட மனித வடிவமே முற்றிலும் கொண்ட கயவருக்கும் மனிதருக்கும் உள்ள வேற்றுமை மிக வியப்பு என்கிறார். அவர்கள் மனிதர்களே அல்ல. மனித தேகம் போன்ற வேறு வகை.

•     •     •

நன்னெறி அறியாத கயவர் பாக்கியசாலிகள். ஏனெனின் அறமும் பாவமும் அறிந்தவர்களுக்கு அதனால் தர்மசங்கடங்கள் பல. இந்தக் கஷ்டம் இல்லை கயவருக்கு என்கிறார் முனிவர்.

நன்றறி வாரின்
கயவர் திருவுடையர்
நெஞ்சத்து அவலம் இலர்.

நன்று அறிவாரின்—நல்லது தீயது என்ற வேற்றுமை உயர்ந்த மேலோரைக் காட்டிலும்.

கயவர் திருவுடையர்—கயவர் பாக்கியசாலிகள். காரணம் இவர்கள் நெஞ்சத்தில் அவலம் (கவலை) இல்லை. தீமை செய்தோமோ, அற வழியில் நின்றோமோ என்கிற கவலை இல்லை.

கயவருக்குப் பாவம் புண்ணியம், புகழ், இகழ் இவற்றைப் பற்றி எண்ணி உண்டாகும் பயமோ கவலையோ கிடையாது. ஆனபடியால் இவர்கள் பாக்கியசாலிகள் என்று வேடிக்கையாகச் சொல்லுகிறார்.

இன்னும் சொல்லுகிறார்:

தேவர் அனையர்
கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.

தேவரும் கயவரும் ஒருதன்மையர். ஏனெனின், இருவரும் தாம் விரும்பியவற்றைச் செய்வர். இவர்களைக் கேட்பார் யாருமில்லை. புகழ்வது போல் பழிப்பதற்கு இந்த இரண்டு பாட்டுக்களும் உதாரணம்.

மேவன—விரும்பியவற்றை.

•     •     •

அச்சமே கீழ்களது
ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது

வேடிக்கை செய்வதை விட்டுவிட்டுக் கடுமையாகச் சொல்கிறார்.

தண்டனை அச்சம் உண்டாக்கித்தான் கீழ்மக்களை நெறியில் செலுத்த முடியும். இதைத் தவிர, ஏதேனும் அவர்கள் விரும்பும் பொருளைக் கொடுத்துத்தான் சிறிது சரிப்படுத்த முடியும். ஆசாரம் — ஒழுக்கத்தில் சிறந்தக்கூடிய முறை.

மற்றவர்கள் ஆசார விதிக்குப் பயந்து ஒழுக்கம் பின்பற்றுவார்கள். கயவர்கள் தண்டனையால்தான் நல்வழியில் நிற்பார்கள்.

எச்சம்—இதைத் தவிரக் கொஞ்சம் பயன்தரக்கூடியது உண்டு. அது இவர்கள் ஆசைப்படும் பொருள் ஏதேனும் இருந்தால், அதைத் தந்து சிறிது பயன் பெறலாம். அவர்களைச் சிறிதளவு திருத்தலாம்.

•     •     •

சான்றோருக்குச் சொன்னால் போதும். சமூகத்துக்குப் பயன்படும் காரியம் செய்வார்கள். கீழ்மக்களோ பலாத்காரத்துக்குத்தான் இணங்குவார்கள். கரும்பை வைத்துக் கீழ்மக்களின் குணத்தை விளக்குகிறார்.

சொல்லப் பயன்படுவர்
சான்றோர்: கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.

கரும்பு ஆலையிலிட்டுப் பிழிந்தால்தான் சாறு தரும். அதைப்போல் கயவரும் ஆலையிலிட்டுப் பிழிவதுபோல் நெருக்கினால்தான் பயன்படுவார்கள்.

சென்னை

ஜார்ஜ் டவுன்

வட்டாரத்தில்

ஏர் கண்டிஷன்

செய்யப்பட்ட



வரவேற்புக் கூடம் ★ சாப்பாட்டு அறைகள் ★ தங்கும் அறைகள்

குளிப்பதற்கான வசதிகள் இணைந்த அறைகள்

மற்றும் எல்லா நவீன வசதிகளும் உள்ள முதல்தரமான ஒரே ஹோட்டல்

# அம்பீஸ் கபே

போர்டிங் & லாட்ஜிங்

(புதுக் கட்டிடத்தில்)

6 & 7, பிராட்வே - - - சென்னை-1

# இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: முதல் லைன் பீச், சென்னை-1

23 சென்னைக் காரியாலயங்கள் - 113 வெளியூர் கிளைக் காரியாலயங்கள்

கடனும் முன்பண வசதியும்

டெபாசிட்டுகள்
- கரண்ட் அக்கௌண்ட்ஸ்
- சேவிங்ஸ் பாங்க் அக்கௌண்ட்ஸ்
- நிரந்தர டிபாசிட்டுகள்
- 3 வருட காஷ் சர்டிபிகேட்டுகள்

செக்யூரிட்டிகளை வாங்கியும் விற்றும் தரப்படும்
அந்நிய செலாவணி வியாபாரமும் நடத்தப்படும்

New York Agents: FIRST NATIONAL CITY BANK OF NEW YORK
London Agents: WESTMINSTER BANK LIMITED

டி. பி. பார்த்தசாரதி, காரியதரிசி

# தேன்கூடு

## அத்தியாயம் 33

## தேவானையின் கண்ணீர்

சங்கத்துக் கொட்டகைக்குள் பாபு குழுங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். குறும்புக்காரக் குழந்தையைப் போல, கீழ்த் திசையில் சூரியன் மெதுவாக எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். இளம் காற்றில் தென்னை மட்டைகள் இமை கொட்டிச் சிரிப்பது போல் அசைந்தாடின. பக்கத்து வீட்டின் வேலி ஓரமாக இருந்த முருங்கை மரம் மயிர் கொட்டிப் போன நோயாளி மாதிரி இலையை உதிர்த்து விட்டு நின்றது. அதைப் பார்த்துக் கொண்டு தென்னை மரத்திலிருந்த ஓணான் ஒன்று சிவந்த தலையை ஆட்டி அழகு காட்டிக் கொண்டிருந்தது. தோட்டத்துப் பறவைகள் எல்லாம் இரை தேடப் போய் விட்டன. தட்டுக்கெட்ட காக்கைகள் மட்டும் ஆங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பட்டன.

அந்தச் சங்கத்தை ஒட்டிக் கோயில் கொண்டிருந்த வெள்ளைப் பிள்ளையார் அரை இருட்டில் அவனைப் போலவே சாம்பிக் குந்தியிருந்தார். அவருடைய குறுகிய சந்நிதி எப்போதும் போலச் சுத்தமாக மெழுகிப் பெருக்காமல் குப்பையாகக் கிடந்தது. பாபு இப்பொழுது தான் சரியாகக் கவனித்தான். இந்தத் தூசித் தும்புக்கு நடுவிலா அவன் இரவெல்லாம் படுத்திருந்தான்?

மூன்று நாட்களாக அவனுக்கு ஓய்ச்சல் ஒழிவில்லாதபடி வேலை இருந்தது. தாயை இழந்து தனியாகி விட்ட தேவானையை ஊரில் அவள் மாமாவிடம் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டிய பொறுப்பு அவனைச் சேர்ந்து விட்டது. மதுராந்தகத்துக்குப் பக்கத்திலிருந்த அந்தப் பட்டிக்காட்டுக்குப் போய் விட்டு அவன் முதல் நாள் இரவுதான் திரும்பி வந்திருந்தான். அன்று இரவு லேடி டாக்டருக்குக் கொடுத்தது போக, பையில் செலவுக்கு வேண்டிய பணமும் தட்டில்லாமல் இருந்து கொண்டே வந்தது. ஆனால் இன்றைக்கு அவன் செய்து முடிக்க வேண்டிய வேலை என்று எதுவுமே இல்லை: கையில் செலவுக்குப் போதுமான பணமும் இல்லை. எப்படியோ வந்து சேர்ந்த பணம் எதற்கோ போய்ச் செலவழிந்து விட்டது. அது அவன் உழைத்து வந்த பணமா? பெரும் பகுதியும் உழைக்காததற்காக வந்த பணம்தானே! அதனால் தான் அது உபயோகமற்ற வழியில் போயிற்றோ?

பாபு அதற்காகச் சிறிதும் கவலைப்படவில்லை. கையில் பணம் இல்லையே என்றும் அவன் கலக்கமடையவில்லை. சண்முகத்தைப் போல, குறைந்த முதல் போட்டுச் சொந்தமாகத் தொழில் நடத்த வேண்டும் என்றே அவன் முடிவு செய்திருந்தான். சண்முகம் ஆரம்பத்தில் இதற்குச் சிறிது உதவி செய்தால் அப்புறம் அவனே பார்த்துக் கொள்வான். இது ஒரு பெரிய காரியமல்ல; ஆனால் இப்போது சண்முகத்திடம் அந்த உதவியைக் கேட்கத் தயக்கமாக இருந்தது. அதுவும் வெள்ளைப்பிள்ளையாரின் சந்நிதியில் கிடந்த குப்பை கூளங்களைப் பார்த்ததும் சண்முகத்தின் நினைவுதான் அவனுக்குச் சட்டென்று வந்தது. அவனிடம் முகம் கொடுத்துப் பேசக்கூடப் பிடிக்காதது போல் தோன்றியது. சண்முகம் அவ்வளவு இரக்கமற்ற முறையில் கண்டிப்போடு நடந்து கொள்வான் என்று அவன் நினைக்கவே இல்லை.

தேவானையின் தாயை அடக்கமெல்லாம் செய்து விட்டு வந்த மறுநாள் அவன் பாபுவைப் பார்த்து. "பணம் கொடுத்தே; அடக்கம் செய்து இரண்டு நாள் காரியங்களும் முடிஞ்சு போச்சு. ஆனால் முக்கியமாகச் செய்ய வேண்டியது இன்னும் ஒண்ணே ஒண்ணு இருக்கு. அதையும் இப்ப நீதான் செய்தாகணும்" என்றான். அப்படிச் சொல்லி விட்டு அவன் பாபுவையும் கொழு கொம்பற்றுத் துவளும் கொடி போலிருந்த தேவானையையும் மாறி மாறிப் பார்த்தான். அவன் என்ன சொல்ல வருகிறான் என்று பாபுவுக்கு விளங்கவில்லை. தேவானைக்கும் விளங்கியிருக்காது.




சண்முகம் அவன் இருந்த பக்கமாகக் கூடத் திரும்

பாமல், விரலால் மட்டும் சுட்டிக் காட்டி, "புரியுதா பாபு! இதை அவுங்களிலே கொண்டு போய்ச் சேர்த்திடணும். இவ்வளவுதான். இதையும் நீதான் செய்தாகணும்!" என்றான்.

பாபுவுக்கு இதன் கருத்து புரியவில்லை. சண்முகம் இப்படிச் செய்வான் என்று சிறிதும் எதிர்பார்க்காத தேவானையும் கண்களில் பீதி படர அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அந்தச் சமயத்துக்குச் சண்முகம்தான் எதையும் முடிவு செய்ய வேண்டியவன் போலவும், பாபு அதன் படி நடக்க வேண்டியவன் போலவும் தோன்றியது. பாபு தனக்கு அடங்கியவனைப் போல அவன் பேசினான்.

"நானு செய்தாகணும்?"

"ஆமாம்; நீதான்! உன்னைத்தான் சொல்லறேன். இது இனிமேல் இங்கே தனியாக இருக்கலாமா?"

அது வரையில் பாபுவுக்கும் சரியாகத் தான் தோன்றியது. ஆனால் அதற்கு மேல் அவனைக் கொண்டு போய்விட அவன்தானா அகப்பட்டான்? ஏன், இதை அவனே செய்யக் கூடாதா?

"தனியாக இருப்பது கூடாதுதான். ஆனால்..." என்று பாபு வார்த்தையை முடிப்பதற்குள் தேவானையின் சோர்ந்த கண்களில் பொல பொல வெனக் கண்ணீர் பெருகியது.

"நான் ஊருக்குப் போகமாட்டேன்." குரல் அழுகையால் தடைப்படக் கூறினாள் தேவானை.

சண்முகம் அதைக் காதில் வாங்கிக் கொண்டவனாகவே காட்டிக் கொள்ளாமல், "நான் என்னமோ போகமுடியாது. வேறு யாரையும் நம்பி இதை அனுப்புவதும் சரியல்ல. அதனால்தான் உன்னைப் போகச் சொல்லறேன்!" என்றான்.



"ஆனால் அது போக மாட்டேன் என்கிறதே!"

"அப்படிச் சொன்னு?"

"அதுக்கு மேலே நாம்தான் என்ன செய்ய முடியும்?"

சண்முகம் அவனுடைய கேள்விக்கு நேரிடையாக விடை சொல்லவனுகத் தோன்றவில்லை.

"அப்படிச் சொன்னு, இங்கேயே இருந்திட முடியுமா? போக மாட்டேன்னு சொல்லிட்டா, சரி போகட்டும்னு விட்டிடறதாக்கும்? அப்படித்தானே?"

"அப்படித்தான்!" என்றாள் தேவானை.

"அதுதான் இங்கே நடக்காது. தெரியுதோ? அதுதான் இங்கே நடக்காதுங்கேன்! சொன்னு, சொன்னபடி கேட்டுத்தான் ஆகணும்!" என்றான் சண்முகம்.

"எல்லாம் கேட்டுத்தான் கெடக்கு!" தேவானை அழுகையும் கோபமுமாய் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"பாத்தியா பாபு, பார்த்துக்க! சொல்லுக்குக் கட்டுப்படறவங்க கிட்டே சொல்லலாம். கட்டுப்படாதவங்க கிட்டே நம்மாலே பேச முடியுமா? பேச்சுத்தான் வக்கணையா?"

தேவானை உதட்டை இழுத்து, கோபத்தோடு பழித்தாள். அதற்குமேல் அவளுக்கு மறுத்துப் பேச வழியில்லை என்று கண்ட அவன், "மூணு மணிக்குக் கோட்டையிலே ஒரு பஸ் இருக்கு, பாபு. அஞ்சரை ஆறுக்கெல்லாம் மதுராந்தகம் போயிடலாம். அப்புறம் ஒரு மைல். நேரே நடக்க வேண்டியதுதான். போய், ராத்திரிக்கு அங்கேயே தூங்கிட்டு, பொழுது விடிய மதுராந்தகம் வந்திடணும். இல்லே, நாளைக் காலையிலே இதை விட்டுப் புறப்பட்டா நாளை ராத்திரியே நீ திரும்பிடலாம்!" என்றான்.

"யாரும் என்னைக் கொண்டு போய் விடவும் வேணும்; திரும்பி வரவும் வேணும். போறதுன்னு எனக்குத் தனியாப் போகத் தெரியும்."

"இந்தக் காலத்துப் பெண்ணுங்களுக்கு எதுதான் தெரியாது? எது தெரியலையோ, அதைத் தவிர!" என்றான் சண்முகம்.

தேவானை எழுந்து கொல்லைப்புறம் இருந்த முருங்கை மரத்தடிக்குப் போய் விட்டாள்.

"உனக்கேன் சண்முகம், இது. அதுக்குப் போகப் பிடிக்கலென்னு விட்டு விட்டுப் போகாமல், வற்புறுத்துவது சரியா?" என்றான் பாபு.

"உனக்கு ஒன்னும் தெரியாது. அது இங்கே தனியாக இருக்கக் கூடாது. அங்கே அதோடே மாமா இருக்காராம். பிடிச்சதோ பிடிக்கலியோ, நல்லதோ கெட்டதோ, அங்கே போய்க் கொஞ்ச நாளைக்கு இருந்துதான் ஆகணும். பல்லைக் கடிச்சுக்கிட்டு இருந்தா, அப்புறம் எப்படியோ பாத்துக்கறது!" என்றான் சண்முகம்.

"அங்கே வசதி எப்படியோ? வீண் தொந்தரவு தானே!" என்றான் பாபு.

"இதோ பாரு! வசதி என்னப்பா வசதி! வாழையிலைச் சாப்பாடா வேணும்?



அதெல்லாம் பெரிய இடத்துக் கவலையப்பா! மாமா ஒரு மாதிரி; மாமன் பெண்சாதி அதைவிட ஒரு மாதிரி.... ஏதாவது நறுக்குன்னு சொல்லுவாங்க தான். இருந்தா என்ன? இங்கே நாலு பேரு நாலு சொன்னா அதுபட்டும் தேவலையோ? அம்மா ஏதோ உழைச்சாங்க. தனியாக வந்து இருந்தாங்க. இப்போ? யாரு எங்கே போய் உழைக்கிறது? நிக்கிறது? யோசிச்சுப் பாரு!"

சண்முகம் எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்து விட்டே பேசுவதாகப் பாபுவுக்கும் பட்டது. அவன் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தான். தேவானையின் நிலையைக் கண்டு அவனுக்குச் சங்கடமாக இருந்தது.

"நீ வேலையில்லாமல் இருக்கியேன்னு உன்னைப் போகச் சொல்றேன். நான் போனா வீண் சண்டைதான் வரும்! இல்லாட்டி நானே கொண்டு போய்த் தள்ளி விட்டு வந்திடுவேன்."

பாபுவுக்குச் சம்மதிப்பதைத் தவிர வேறு வழியில்லை. மறுநாள் காலையில் தேவானையின் முகத்தைப் பார்த்தபோது பாபுவுக்கு நெஞ்சைக் கலக்கியது. அழுது அழுது தூக்கமில்லாமல் அவள் முகம் கன்றிச் சிவந்து கரந்து கிடந்தது.

"சண்முகம்! இரண்டு நாட்கள் கழித்துப் போனால் என்ன?" என்று அவனிடம் வந்து ரகசியமாகக் கேட்டான்.

சண்முகம் ஒரே பிடிவாதமாக இருந்தான். "அதெல்லாம் முடியாது. உனக்குக் கொண்டு போய் விட்டுவர இஷ்டமில்லேன்னு சொல்லு....நான் வேறே ஏற்பாடு செய்யறேன்!" என்றான்.

தேவானை அவனிடம் தனியாக ஏதோ சொல்ல விரும்பி, தயங்கித் தயங்கி நின்றாள். சண்முகம் இது தெரிந்தும் தெரிந்து கொள்ளாதவனைப் போல், "உம், உம்....நேரமாயிட்டுது. முதல் பஸ்ஸுக்குப் போகணும்!" என்று எட்டப்போய் நின்றுகொண்டு விரட்டும் குரலில் கூறினான்.

தேவானையின் கண்ணீரை அவன் பொருட்படுத்தியதாகத் தோன்றவில்லை. பாபுவுக்குக் கண்கள் கசிந்தன. அவர்கள் எவ்வளவுதான் சண்டை பிடித்துக் கொண்டாலும் எந்த அளவு அந்நியோந்நியத்துடன் பழகினார்கள் என்பது பாபுவுக்கு ஓரளவு தெரியும். ஆனால் அவனுடைய தாயின் காலம் முடிந்த பிறகு சண்முகம் தன் நெஞ்சை இவ்வளவு பாறையாக்கிக் கொள்வான் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அன்பும் ஆதரவும் காட்டி, அவளைத் தேற்ற வேண்டியவன் சற்றும் மனம் கசியாமல் அவளை ஊருக்கு அனுப்புவதில் அத்தனை துடியாக இருப்பானேன்?

நிறை சூலியான சீதாதேவியைக் காட்டில் கொண்டு போய் விட்டுப் போவது போலத்தான் பாபு உணர்ந்தான். ஆனால் சண்முகம் அவளுடைய அண்ணனுமல்ல; தேவானை நிறைசூலியான அண்ணியுமல்ல!

பஸ்ஸில் போய் இறங்கிப் பிறகு அந்த ஊர் ஏரியைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு நின்றாள் தேவானை. பாபுவின் நெஞ்சு மீண்டும் கலங்கியது. அந்தக் கண்களிலே ஒளிர்ந்த சோகத்தை அவனால் நிமிர்ந்து பார்க்கவே முடியவில்லை. போகும் வழியெல்லாம் அவள் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டே சென்றாள். "என்னை இவ்வளவு விரட்டு விரட்டுதே அது, நான் மட்டும் அதன் பேச்சை எதுக்காகக் கேக்கணுமாம்? பல்லைக் கடிச்சிக்கிட்டு இருக்கணுமாம்? நான் எப்படியோ இருக்கறதுக்கு இது என்ன யோசனை சொல்றது!" — ஊர் நெருங்கும் போது அவள் இப்பொழுது தான் முதன் முதலாக வாயைத் திறந்து பேசினாள்.

அவள் அழுது முகத்தை வீங்க வைத்துக் கொண்டதை ஊரில் அவள் மாமியோ அவர் மனைவியோ, தவறாகக் கருதவில்லை. தாயை இழந்த துக்கத்தினால் அழுதிருப்பதாகவே எண்ணினார்கள். இல்லாவிட்டால் இதுவே பெரிய சங்கடமாகப் போயிருக்கும். அவன் கடைசியாக அந்த ஊரை விட்டுத் திரும்பியபோது அவள் எப்படியோ தனியாக வந்து, "அண்ணே! அது என்னை மறந்தாலும் நீங்க மறந்துடாதீங்க, அண்ணே!" என்று குரல் குழறக் கூறி, கண்ணீர் வடித்து நின்றாள்.

அந்தப் பெண்ணின் உள்ளத்திலே இருந்த ஏக்கத்தை யெல்லாம் அளவிடத் தெரியாமல் அவன் நீல வானத்தைப் பார்த்துவிட்டுப் பெருமூச்சு விட்டான். 'இந்த ஏக்கம் இந்தப் பரந்த வானத்தை விடப் பெரியது!' என்று எண்ணியது அவன் உள்ளம். அவளுக்கு எத்தகைய ஆறுதலும் கூறத் தெரியாதவனாக அவன் தலையை மட்டும் வெறுமனே ஆட்டிவிட்டு வந்தான். சண்முகத்தை அந்த எளிய பெண் எவ்வளவு நேசித்தாளோ அவ்வளவு அவளை மனத்துக்குள் சுமந்து கொண்டு அவன் ஊருக்குத் திரும்பி வந்தான். சண்முகம் எத்தனை ஆழ்ந்து சிந்தித்திருந்தாலும் அதெல்லாம் நிலத்தில் சிதறி விழும் இவளுடைய கண்ணீர் முத்துக்களுக்கு முன்னால் துளி மதிப்பாவது பெறுமா?

தினம் அவன் மெழுகிப் பெருக்கும் வெள்ளைப் பிள்ளையாரின் சந்நிதியில் இருந்த குப்பை கூளங்கள் இதைத்தான் நினைவூட்டின. சண்முகம் இரவு வந்து

# எனக்குப் பூரண திருப்தி

**விலைக்கு வாங்கக்கூடிய குழந்தையுணவுகளில் மிகச் சிறந்ததையே வாங்குகிறேன் என்ற திருப்தி**

**Glaxo**

போதிய தாய்ப்பால் இல்லாத இளங் குழந்தைகள் வளருவதற்கும் உகந்த சாலச் சிறந்த பாலுணவு.



குழந்தை முதல் முதலாக உண்பதற்கு ஏற்ற கலப்பதார்த்த உணவு பாரெக்ஸ், — குழந்தை திடகாத்திரமாகவும், ஆரோக்கியமாகவும் வளர்ச்சி பெறுவதற்கான புரதசத்துக்கள், வைட்டமின்கள், உலோகச் சத்துக்கள் அனைத்தும் சேர்ந்துள்ள நன்செய் தானிய உணவே அது. தாய்ப்பால் அருந்திவரும் குழந்தைகளுக்கும் சரி, புட்டிப்பால் அருந்திவரும் குழந்தைகளுக்கும் சரி, நான்காவது அல்லது ஐந்தாவது மாதமுதல் பாலைத் தவிர பாரெக்ஸ் உணவும் தேவைப்படுகிறது.

"க்ளாக்ஸோ குழந்தைப் புத்தகம்" இலவசமாகப் பெற விரும்புவோர், அதன் தபால் செலவிற்காக 30 ந. பைசாக்களுக்கு தபால் வில்லைகள் இணைத்து எழுதுங்கள்: க்ளாக்ஸோ உட்ஸ் ரோடு, மதராஸ்—2.

**க்ளாக்ஸோ லாபரெட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.**
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புதுடில்லி
டிப்போக்கள்: ஸ்ரீநகர் . கௌஹாத்தி . விஜயவாடா

# சிரிக்காதே!

### திரும்பவில்லை!

"உங்க மகன் ஆஸ்பத்திரியில் போய் ஆபரேஷன் பண்ணிக் கொண்டானே, சௌக்கியமாச்சில்லவா?"

"ஆப்பரேஷனும் சரியாகச் செய்தாங்க. உடம்பும் சரியான நிலைக்கு வந்தது. அப்புறம் தான் கோளாறு ஏற்பட்டு ஆஸ்பத்திரியிலிருந்து அவன் வரவே இல்லே."

"என்ன நேர்ந்தது?"

"அவன் நர்ஸைக் கலியாணம் செய்து கொண்டு எங்கோ போயிட்டானுங்க!"

### கை எங்கே?

"உன் கஷ்டத்தில் உனக்குச் சமயத்தில் உபகாரம் செய்யும் கை வெகு தூரத்தில் இல்லை.......அது உன் தோளிலேயே மாட்டப் பட்டிருக்கிறது." — ஓர் ஆராய்ச்சி.

### சேமிப்பு வைத்தியம்

டாக்டர்: காப்பி, சிகரெட், சினிமா இதெல்லாம் இல்லாமல் நீங்கள் இனி இருக்க வேண்டும்.

நோயாளி: இதெல்லாம் இல்லாமல் சும்மா எப்படி இருப்பதுங்க?

டாக்டர்: இதிலெல்லாம் செலவழிக்காமல் பணம் சேர்த்து என் பழைய பில் பாக்கியைக் கொடுப்பது.

### சுண்டைக்காய் கால் பணம்

"திருடன் இரும்புப் பெட்டியை உடைத்துத் திருடி விட்டான்!"

"இரும்புப் பெட்டியில் எவ்வளவு பணம் இருந்தது?"

"ஒரு எட்டணாதான் இருந்தது."

"இனிமேல் எட்டணா, நாலணா இரும்புப் பெட்டியில் இருந்தால் பெட்டியைத் திறந்தே வைத்து விடுங்கள். பெட்டியைத் திருடன் வந்து உடைத்தால் ரிப்பேருக்கு ரொம்பச் செலவாகி விடுகிறது."

### ஞாபகார்த்தம்

"அந்தக் கடிகாரத்தை நான் திருடவில்லை. என் தகப்பனார் அவர் ஞாபகார்த்தமாக எனக்குக் கொடுத்துச் சென்றார்."

"எங்கே? ஜெயிலுக்கா?"

### எண்ணிப் பார்!

"நீ ஒரு மடையனோடு விவாதம் செய்யும் போது அவனும் அதே காரியத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறான் என்பதைப் பார்த்துத் தெரிந்துகொள்."

### பிரசங்கிகளுக்கு ஒரு யோசனை!

"கூட்டம் உன்னை விட்டு எழுந்து போவதற்கு முன்னால் நீ அவர்களை விட்டுப் பிரிந்து போய்விடு!"

பிடிக்கவில்லையோ? அது விஷயமாகத் தான் அம்மாவுக்கும் பெண்ணுக்கும் சண்டையாக இருக்குமோ?

"அப்பா எனக்குத் தெரிஞ்ச இடம் ஒன்னு இருக்கு. அதைப் பார்க்கலாமா?" என்றான் குப்பன்.

"இல்லே; இனிமேல் நான் எங்கும் வேலைக்குப் போக வேண்டாம் என்று பார்க்கிறேன். சொந்தமாக ஏதாவது செய்யலாமா என்று யோசிக்கிறேன்!" என்றான் பாபு.

"அதுக்கும் பணம் வேண்டாமா? ஜட்ஜ் வீட்டிலே கொடுத்த பணம் போதுமா?" என்றான் குப்பன்.

அந்தப் பணமும் செலவாகிவிட்ட விவரத்தைப் பாபு அவனுக்கு விளக்கிச் சொன்னான்.

"அப்படி இருக்கிறப்போ-முதலுக்கு எங்கே போறது? இருந்ததையும் இழந்துட்டு நிக்கிறியே! சரி; எனக்கு நேரமாயிட்டுது. அப்புறம் பார்ப்போம்!" என்று சொல்லி விட்டு எழுந்த குப்பன் எதையோ நினைத்துக்கொண்டு திரும்பினான். "ஆமாம்; மீசைப் பக்கிரிக்குத் திடீர்னு என்ன வந்திட்டுது?" என்று கேட்டான்.

"என்ன — எனக்கு ஒன்றும் தெரியாதே!" என்றான் பாபு.

"நீ அவனைப் பார்க்கவில்லையா? சில்க் சட்டை என்ன, கையிலே ரிஸ்ட் வாட்ச் என்ன? பையிலே மடிப்பு மடிப்பா புத்தம் புது நோட்டு என்ன? அவனுக்கு ஏது இதெல்லாம் திடீரென்று?" என்றான் குப்பன்.

பாபுவுக்கு இதைக் கேட்கவே அதிசயமாக இருந்தது. குப்பன் மட்டும் இதைச் சொல்லாமல் இருந்தால் அவன் நம்பியிருக்கவே மாட்டான்.

மறுபடியும் அவன் பெயரைச் சொல்லி வெளியில் ஒரு குரல் அழைத்தது. அழைத்தவள் பாஞ்சாலிதான். பாபு கொட்டகையை விட்டு வெளியில் வந்து பார்த்தான். அவன் கண்களை அவனால் நம்பவே முடியவில்லை. தகதக வென்று புதுப் புடைவையும் நகைகளுமாகச் சிங்காரித்துக் கொண்டு சம்பந்தியம்மாளைப் போல வந்து நின்று கொண்டிருந்தாள் அவள்.

குப்பன் கண்ணைச் சிமிட்டிக்கொண்டு, "நான் வருகிறேன், பாபு!" என்று சொல்லி விட்டுப் போனான்.

பாஞ்சாலி உள்ளே வந்து ஓர் ஓலைத் தடுக்கை எடுத்துப் போட்டுக்கொண்டு, புடைவை அழுக்காகாமல் உட்கார்ந்து கொண்டாள். அவள் வந்திருக்கும் காரணம் தெரியாமல் விழித்தான் பாபு.

(தொடரும்)

## இராதாபுரம்
## திரு சு. வெள்ளையன் செட்டியார்
### அவர்களின் மறைவு



நெல்லை மாவட்டப் பெருந்தகை யாவரும் வியக்கும் கட்டிடமும், பேரும் பொருளும் ஈந்து, தன் பெயர்கொண்ட அழகு உயர்நிலைப் பள்ளியை நிறுவிய வள்ளல் சு. வெள்ளையன் செட்டியார் அவர்கள் 27-6-1959 சனிக்கிழமையன்று 72-வது வயதில் இறைவன் திருவடி நிழல் எய்தினர்.

சிறந்த புகழ்பெற்ற அன்னார்
அன்பின் நன்மக்கள் :

சு. வெ. சோமசுந்தரம் செட்டியார்
சு. வெ. சுப்பையா செட்டியார்
சு. வெ. ஐயன்பெருமாள் செட்டியார்
சு. வெ. இராமவேலு செட்டியார்

இடம் : இராதாபுரம் - நாள் : 17-7-1959




## 113. குடற் கிருமி

"குடற்கிருமி என்னும் சொல் எனது சிருஷ்டி. கிருமிகோஷ்டம் என்று வடமொழி வைத்திய நூல்களில் சொல்லியிருப்பதைத் தமிழ்ப் படுத்துவதானாலும் 'கிருமிக் குடல்' என்றுதானே சொல்ல வேணும்! அப்படியானாலும் கிருமிக்குச் சிகிச்சை செய்வதா? கோஷ்டத் (குடலுக்கு) துக்குச் சிகிச்சை செய்வதா என்ற சந்தேகம் எழக் கூடுமல்லவா?"

"எழக்கூடும். எழக் கூடும். கட்டாயமாகவும் எழக் கூடும். தொன்னைக்கு நெய் ஆதாரமா, நெய்க்குத் தொன்னை ஆதாரமா என்ற சந்தேகம் நியாய சாஸ்திரம் படித்த ஒருவனுக்கு எழுந்ததாம். தொன்னையைக் கவிழ்த்துப் பார்த்தானாம் என்று ஒரு கதை இருக்கிறதே, அதைப் போலாகி விட்டாலோ?"

"உதாரணம் முற்றும் பொருந்தும். ஆனால் அதை நீர் புரிந்து கொண்டது தான் சரியல்ல."

"அது எப்படி ஐயா?"

"நீர் நியாய சாஸ்திரம் படிக்கவில்லை. ஆச்ரய ஆச்ரயீ பாவத்தை விளக்கச் சொன்ன ஒரு ஹாஸ்யத் துணுக்கை உம் இஷ்டம் போல் நீர் அர்த்தம் பண்ணிக் கொண்டு, பிறகு அதைக் குறை கண்டு பிடிப்பது சரியல்ல. இந்தத் தொன்னைநெய் கதையால் அன்யோன்ய ஆச்ரயம் என்ற உண்மை விளக்கப் பட்டது. தொன்னையில்லா விட்டால் நெய் மண்ணில் வழிந்தோடும். ஆகவே நெய்க்குத் தொன்னை ஆதாரம் அல்லது ஆச்ரயம். நெய் அதில் இல்லாவிட்டால் தொன்னையை அடுக்களையில் வைத்திருப் பார்களா? குப்பைத் தொட்டியிலல்லவா எறிந்திருப்பார்கள்? ஆகவே தொன்னைக்கும் நெய் ஆச்ரயம். இப்படி ஒன்றுக்கொன்று ஆச்ரயமாயிருப்பதை அன்யோன்ய ஆச்ரயம் என்பர். இதை விளக்கச் சொன்ன துணுக்கை நீர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. நியாய சாஸ்திரம் படித்தவனுக்குப் புத்தி குறைவு. பொது அறிவு லேசமே கிடையாது என்பதைத் தெரிவிக்கும் ஒரு கதை என்று புரிந்து கொண்டது உமது பிசகு."

"அப்படியா? போகட்டும். இந்தக் குடற்கிருமி அல்லது கிருமி கோஷ்டம் என்பதிலும் கிருமி-குடல் இரண்டுக்குமே அன்யோன்ய ஆச்ரயமா? இதன் விவரத்தை விளக்குங்கள்."

நமது உடலே ஒரு எருக் குழி. நாற்ற மெடுத்த எருக் குழி. இதில் குடல் ஒரு சாக்கடை. சாக்கடை என்றும் போதாது. ஓர் ஆயிரம் சாக்கடை-பக்கிங்காம் கால்வாய் என்று அமைத்தாலும் போதாது. இந்த எருக் குழியிலும் பக்கிங்காம் கால்வாயிலும் கிருமிகள் உண்டாவதற்குக் கேட்க வேண்டுமா?

உடல் இயக்கம் ஒன்றுண்டல்லவா! ஆகாரம் ஜெரித்தாக வேணும். சத்துப் பொருள்கள் ஏற்கப்பட்டுக் கழிவுப் பொருள் வேறுபடுத்தப்பட வேணும். இக்கழிவுப் பொருள்களே போதும், மேற்சொன்ன விதம் சரீரத்தை எருக் குழியாகவும், குடலை ஒரு சாக்கடையாகவும் செய்வதற்கு. 'போதாக் குறைக்குப் பொன்னியம்மன் குறையாக' இச்சாக்கடையை நாமாகவும் சில சமயம் கேவலப்படுத்துகிறோம். ஆகாரத்தின் உள்ள வித்தியாசங்கள், வாழ்க்கையின் தரத்திலும் சூழ்நிலையிலும் உள்ள வேற்றுமைகள், சரீரம், மனம் இவற்றில் இயற்கையாகவே ஏற்படும் சில பாகுபாடுகளின் பேதம் என்று இப்படிப் பல காரணங்களால் நிர்ணயிக்கப்படும் சத்துப் பொருள்களின் தரமும் அளவும் ஏற்றத் தாழ்வை அடையலாம். அவ்வாறே கழிவுப் பொருள்களின் தராதரம், ஹிதாஹித ஸ்வபாவம், அளவு ஆகியவற்றிலும் ஏற்றத் தாழ்வு ஏற்படுவதும் தவிர்க்க முடியாதது.

சாக்கடை சாக்கடையாகத் தானே இருக்க முடியும்! இருக்கவும் வேணும்? ஆகவே ....? பள்ளத்தை நோக்கியே தண்ணீர் ஓடுவது போல் சில கழிவுப் பொருள்கள் குடலையேதான் வந்தடையும். ஆகவே இயற்கையாகவே சில கிருமிகள் குடலில் இருக்கும். இவை நமக்கு அனுகூலமான சில செயல்களைப் புரிகின்றன. இக்கிருமிகள் தாமாகவே ஒன்றோடொன்று ஒன்றி வாழும் வாழ்க்கைத் தரத்தின் விளைவாக வைடமின் 'பி' [அதிலும் பி-12] என்னும் ஒரு முக்கியமான சத்துப் பொருளை உண்டாக்கவும், ஆரோக்கியத்துக்கு அவசியமான அளவுக்குக் குறையாமல் இந்த 'வைடமின்பி' என்னும் சத்துப்பொருளை நமது ரத்தத்தில் தேவையான தரத்தில் வைத்துக் கொள்ளவும் காரணமாக நின்று மித்திரக் கிருமிகளாக உதவிபுரிகின்றன. இத்தொடர்புதான் குடலுக்



"என்ன ஜோஸ்யர்வாள்! நான் உமக்கு என்ன கெடுதல் செய்தேன்? நான் "ஆயுளைச்" சொல்லிக்கொடுக்கிற 'விதிகளில் போய் 'ஒரு மாதிரிக்குத்தான் வயசுக்குப் படிப்பு நன்னா வரும், ஒரு மாதிரிக்குத்தான் பண் ஆயுள்' னு சொல்லிவிட்டு வருகிறீரே?"

குக் கிருமிக்கும் உள்ள அன்னியோன்னிய ஆச்ரயம்.

இவை ஒருபுறமிருக்க, மேலே தெரிவித்த காரணங்களால் சில சமயம் நமது ஆரோக்யத்தைப் பாதிக்கக் கூடிய, ஏன், வியாதிகளையே உண்டாக்கக் கூடிய கிருமிகளும் குடலில் உண்டாக நேரிடலாம். இந்நிலையில்தான் இவ்வகைக் கிருமிகளைப் போக்கச் சிகிச்சை செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

'குழந்தையைப் பாருங்கோ! வயசு.... ஆகிறது. வயசுக்குத் தக்க வளர்த்தியே இல்லே. இத்தனூண்டு சாப்பாடு சாப்பிட மாட்டேங்கறது. ஒரு வாய் சாப்பிட்டாலே போதும் போதும் என்கிறது. வயிற்றிலே 'களுக் களுக் என்று அப்பப்போ குத்தல் என்று சில சமயம் அழத் தொடங்கி விடுகிறது. சில சமயம் வயிற்றிலே வலி. மலமும் சரியாகப் போகிறதில்லே. போனாலோ நிறை...ய்...ய்...ய சின்னச் சின்னக் கீரைப் பூச்சிகள் விழுகின்றன!' என்று இப்படிச் சொல்லிக் கொண்டு வரும் தாய்மார்கள் சிலர்.

'நன்றாகச் சாப்பிட்டுக்கிட்டு விளையாடிக் கொண்டிருந்த குழந்தை பாருங்கோ. இப்போ இருபது நாட்கள் ஒரு மாதமா நிறுத்திப்புட்டு சாப்பிட மாட்டேங்கிறது. உடல் பாதி உடம்பா இளைச்சுப் போச்சு. வயிறு மட்டும் குண்டு வயிறு தட்டி இப்படிப் பார்க்கச் சகிக்காமப் போச்சு. இது நடுவிலே பத்து நாட்களுக்கு முன்னே பாருங்கோ வயிற்றை வலிக்குதுன்னு சொல்லிச்சு. சித்த நேரத்துக்கெல்லாம் ஒரு தரம் வாந்தி எடுத்தது. அதிலே இத்த...தனே நீளத்துக்கு ஒரு நாகப்பூச்சி விழுந்தது. வாயாலேகூடப் பூச்சிவிழுமோ? அதைப் பார்த்துட்டுக் குழந்தை பயந்தே பூட்டுது. மறுநாள் டாக்டரைக் கொண்டு காண்பிச்சேன். அவர் பூச்சி மருந்து கொடுத்து மறுநாள் பேதிக்குக் கொடுத்தார். ஒரு இருபது இருபத்தஞ்சு பூச்சி கொத்துக் கொத்தா விழுந்தது. இந்த வயிற்றிலே இத்தனை பூச்சிக்கும் எங்கே தான் இடம் இருந்ததோ? அப்படி விழுந்தது. ஆனாலும் மறுநாள் முதல் இருந்த பசியும் போயிடுச்சு. சாதத்தைக் கண்ணாலேகூடப் பார்க்க மாட்டேன் என்கிறது. டாக்டரானா இன்னும் பூச்சிகள் இருக்கும், சில நாட்கள் ஆன பிறகு மறுபடியும் பூச்சி மருந்து கொடுக்கணும் என்கிறார். மாடி மேலே குடித்தனம் இருக்கிற மாமி அப்படியெல்லாம் கண்ணை மூடிக்கிட்டு அடிக்கடி பூச்சி மருந்து கொடுக்கப்படாது என்கிறார். குடலே அதனால் கெட்டுப் போகுமாம். இப்போ இந்தப் பூச்சி மருந்து கொடுக்கப் போகக் கொஞ்ச நஞ்சமிருந்த பசியும் போய் விட்டது. இன்னும் பூச்சி மருந்தைக் கொடுக்கலாமோ கூடாதோன்னு பயமாயிருக்கு'' என்று சொல்லி வரும் தாய்மார்கள் சிலர்.

''ராத்திரி படுத்துத் தூங்கிறை பல்லே நற நறன்னு கடிக்கிறது. பக்கத்திலே விட்டுக்கிண்டு படுத்திண்டமானு...... நமக்கே பயமாயிருக்கு. டாக்டர்கிட்டே காண்பிக்கக் கேட்டப்போ அவர் வயிற்றில் ஏதாவது கிருமிகள் இருக்கும்னு சந்தேகப்படுகிறார்'' என்று கூறி வரும் தாய்மார்களும் சிலர்.

ஆகாராதிகள் மூலமாகச் சில விஷக் கிருமிகள் சென்று சீதபேதி, வயிற்றுக் கடுப்பு ஆகியவற்றை உண்டாக்குவதும் ஏன்? டைபாய்டு போன்ற விஷ ஜுரங்களை உண்டாக்குவதும் சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

கொக்கிப் புழு என்னும் ஒருவிதக் கிருமி குடலில் சேருவதால் பெரியவர்களுக்குக் கூடக் கடுமையான ரத்தக் குறைவு ஏற்படுவதும், அதனால் முகமெல்லாம் வெளுத்துக் கண்ணும் நாக்கும் வெள்ளை வெளேர் என்று மாறி, தலைசுரந்து கொண்டு, வயிறு குண்டு வயிறு தட்டி, அன்னத் துவேஷம்-அஜீர்ணத்தில் தோய்வு, சிறிது நடந்தாலும் பேசினாலும் இரைப்பு-புறங்கைகளில் சிறிது வீக்கம் என்று இப்படிப் படிப்படியாக முன்னேற்றமும் ஏற்பட்டு, பெரும் பாண்டு ரோகம் வருவதும் உண்டு.

விஸ்டம் பல் வைத்தியரின்
புத்திமதியைக் கேளுங்கள்

# உங்கள் பற்களை

பாதுகாத்துக்

கொள்ள

REGD.

# *Wisdom*

உங்கள் பற்களை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளுங்கள்— "விஸ்டம்" பிரஷ் கொண்டு காலையிலும் இரவிலும் பல் துலக்கவும்— முடியுமானால் சாப்பாட்டிற்கும் பிறகும் அவ்வாறே துலக்கவும்.

உறுதியுடன் நீண்டகால உழைப்பிற்காகவே ஆக்கப்பட்ட 'விஸ்டம்' பிரஷ் பற்களை முற்றிலும் சரிவர சுத்தம் செய்வதற்காக அமைந்துள்ளது. வசதியான கைப்பிடி லாகவமாய்ப் பிரஷைக் கையாள ஏற்றது. குறுகலான பிரஷ் நுனிகள் பல் வரிசைகளின் எந்த இடைவெளிகளிலும் படியும்படி அமைந்துள்ளது. கம்பியிலும் கட்டப்பட்ட மிருதுவான நைலான் ரோமங்கள் பல் இடுக்குகளிலும் சுத்தம் செய்யக் கூடியவை. அருகாமையிலுள்ள கடையில் 'விஸ்டம்' பிரஷ் வாங்கிக் கொள்ளுங்கள்.

NYLON

Wisdom

## நீடித்து
## உழைக்கும்
## டூத் பிரஷ்

பும் என்ற எண்ணமே என்னைத் தகித்துக் கொண்டிருந்தது. அதற்குப் பின் நாங்கள் இருவரும் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ளவே இல்லை.

• • •

'ஓ'வென்று அழுகுரல் கேட்டது. ''பாவி போய்விட்டான்!'' என்றாள் என் தாயார். அவளுடைய குரல் எப்போதுமே சற்றுப் பெரியது. நான் எழுந்



யோரும் இதுவரையில் புழக்கடையில் உட்கார்ந்து பதினைந்தாம் புள்ளி ஆடிக் கொண்டிருந்தோம்!''

நான் மாதுவை திரும்பிப் பார்த்தேன். அவளும் முறைத்தாள்.

''டேய்! நீ என் சில்லைப் பிடுங்கிக் கொண்டு ஓடவில்லை?'' என்று அவனைக் கேட்டேன்.

''சில்லா? ஏது சில்லு? அதுதான் உன் வீட்டிலேயே இருக்கே!''

வாஸ்தவம். சில்லு என் கையில் தான் இருந்தது. நெற்றியிலிருந்து ரத்தம் வழிந்தது. 'அதோ பாருங்கள், தாத்தா! அவன் நெற்றியில்கூட ரத்தம்!' என்று காட்டினேன்.

'ரத்தமா அது, ஏதோ வாழைப்பால்'' என்று தாத்தா மழுப்பினார். ''எங்கேயோ காயமும் பட்டுக் கொண்டு குழந்தை மேல் பழியா சொல்லுகிறாய். திருட்டுப் பயலே!'' என்று என்னை விரட்டினார். போகையிலே நானும் என் பாட்டியும் திரும்பினோம். தஞ்சாவூர் பெரிய ஆஸ்பத்திரிக்கு என்னை எடுத்துச் சென்று நெற்றியில் தையல் போட்டார்கள். மூன்று மாதங்கள் படுக்கையில் கிடந்தேன். நெற்றிப் புண் ஆறிவிட்டது. ஆனால் நெஞ்சப் புண் பல்லாண்டுகளாகியும் ஆறவில்லை. போய் இவ்வளவு எளிதில் வெற்றிபெற்றானே முடி

இருந்தேன். துண்டை உதறிப் போட்டுக் கொண்டு புறப்பட்டேன்.

நான்கு வீடுகள் தெற்கே தள்ளி மாதுவின் வீடு. திண்ணை. அதற்கு வெளியில் சார்பு, அதன் கீழ் முற்றம். வெளி வாசலில் கூட்டம் கூடியிருந்தது. உள்ளேயிருந்து அழுகுரல் கேட்டது. அவற்றில் ஒன்றுகூட உணர்ச்சியுடன் இல்லாததைப் போல எனக்குத் தோற்றமளித்தது. அவனுக்காக யார் அழுவார்கள்? அவன் பிரிவை நினைந்து வருந்தும்படி இந்த உலகத்தில் அவன் என்ன காரியம் செய்திருக்கிறான்?

என்னைக் கண்டதும் கூட்டம் வழிவிட்டது. ஒரு சிலர் என்னை வியப்புடன் பார்த்தார்கள்; வேறு சிலர் கசமுச வென்று ஏதோ பேசிக் கொண்டார்கள். நான் நேராக உள்ளே சென்றேன். மாது கூடத்தில் படுத்திருந்தான். அதாவது அவன் உடல் கூடத்தில் விசிப் பலகையில் கிடத்தப்பட்டிருந்தது. அவன் உடல்மேல் தாறுமாறாகக் கிடந்த சால்வையை எடுத்துக் கழுத்து வரையில் போர்த்தினேன்.



உங்கள்
கேசத்திற்கும்
தலைக்கும்
ஆரோக்கியத்தையும்
போஷாக்கையும் அளியுங்கள்!






புதிய **கால்கேட்**
**ஹேர் டானிக்**
*லெனொலின் கலந்தது*

---

வலிமைக்கு
புலி
மார்க்கு
தேயிலை




**புலி மார்க்கு தேயிலை**

LIPTON (INDIA) LIMITED (Incorporated in England)

பின்னேயைக் கொண்டே ரொக்கம் வாங்கிப் பிழைப்பை நடத்துகிறார்களோ என்று சந்தேகம் பாலுவுக்கு ஏற்பட்டது.

'அக்காவைக் கல்யாணம் செய்து கொள்ளக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே! அது சரி. எதற்காகக் கல்யாணம் என்று செய்கிறார்கள்?' பாலு யோசித்துப் பார்த்தான். புரியவில்லை. ஆனாலும் அது ஒரு தவிர்க்க முடியாத தேவை என்று எண்ணிக் கொண்டான்.

அப்பா இன்ஷூர் செய்திருக்கிறார். யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன் என்பார்களே, அந்த மாதிரி ஒரு ஆயிரம் ரூபாய்க்கு. அந்தப் பணம் கைக்கு வர இன்னும் மூன்று வருடங்கள் ஆகும். அம்மாவின் நகைகளும், வயிறு இறுகச் சேர்த்து வைத்த பணமும் போதாதாம். இன்னும் ஆயிரம் ரூபாய் வேண்டுமாம். அம்மாடியோவ்!

நடந்தபடியே யோசித்தான் பாலு.

ஒரு வழியும் தெரியவில்லையே! பணம் ஆயிரம் ரூபாய் வேண்டும். அல்லது ஒரு நல்ல மாப்பிள்ளைப் பிள்ளையாண்டான் வேண்டும். முன்னது கிடைத்தாலும் கிடைக்கும். நல்ல மாப்பிள்ளைக்கு எங்கே போவது?

தெருவில் போவோர், வருவோரை யெல்லாம் பார்த்தான். நல்லவர்களாகத் தான் தோன்றினார்கள். கூப்பிட்டு வருந்தி வருந்தி விருந்து வைத்துக் கேளுங்கள், பார்க்கலாம். உச்சாணிக் கிளைக்குத் தாவுவார்கள். இரண்டு உதை கொடுத்து, 'கட்டு தாலியை' என்று சொல்ல வேண்டும்.

நகராண்மைக் கழகத்தார் பொது மக்களின் நன்மைக்கென்று நிர்மாணித்திருந்த பூங்காவில் நுழைந்து சிமிட்டிப் பலகையில் அமர்ந்தான் அவன். அருகில் நீர்த் தொட்டியில் ஒரு கந்தர்வப் பெண் வானத்தைப் பார்த்து நீரை உமிழ்ந்து கொண்டிருந்தாள். இவளுக்குக் கணவன் வானத்திலிருந்து குதிக்கப் போகிறான் என்ற எண்ணமோ! அவனுக்குத் தெரிந்த நாளாய் இதே வித்தையைச் செய்து கொண்டிருக்கிறாள் அவள். இன்னமும் ஒரு கந்தர்வனும் இறங்கி வரவில்லையே!

தோட்டம் குளுமையாகத்தான் இருந்தது. பாலு அங்கே மணலில் விளையாடியிருக்கிறான். சருக்கு மேடையில் உருண்



டிருக்கிறான். ஆனால் இன்றைக்கு அவன் மனத்தில் சருகு வேட்டையோ, மணலோ, குளிர் நிழலோ படியவில்லை. அவன் ஒரு நல்ல மாப்பிள்ளையைத் தேடிக் கொண் டிருந்தான்.

நேரம் போய்க் கொண்டே இருந்தது. பல்பான இரண்டு இளைஞர்கள் தாளம் போட்டபடி வானொலியின் இசையை ரசித்தார்கள். சில இளைகள் மகாநாடு கூட்டிவிட்டன, அரச மரத்தடியில். கல் யாணமான இளம் தம்பதிகள் குறுக்கும் நெடுக்கும் போய் வந்து கொண்டிருந் தார்கள். எத்தனை ஆயிரமோ, வைரத் தோடோ, கையில் ரொக்கமோ! அட கடவுளே!

நில்லையும் செய்து கொடுத்து எதற் காகக் கல்யாணமோ?

நாளைக்கு அவனும்தான் சம்பாதிக்கப் போகிறான். யாரையாவது கல்யாணம் செய்து கொள்கிறது. பார்ப்போம், கல்யாணமாம், கல்யாணம்!

அக்காவுக்குக் கல்யாணமாகிவிட்டால் அவள் கணவன் வீட்டுக்குப் போய் விடு வாள். அப்புறம் அடிக்கடி அவளைப் பார்க்க முடியாது. அடேடே! மறந்தே போய் விட்டானே! அக்காவுக்கு அழ கான ஒரு சாதுப் பயல் பிறப்பான் இல்லையோ? அவனைப்பற்றி எத்தனையோ கனவுகள் பாதுவுக்கு. அந்தப் பயலைத் தூக்கிக்கொண்டு அவன் தோட்டத் துக்கு வருவான், கந்தர்வப் பெண்ணைக் காட்டுவான், பெட்டிப் பலகையில் தூங்க வைப்பான். அவனை 'அம்பி' என்று கூப்பிடுவான்.

"டே அம்பி, கொஞ்சம் நகரடா" என்ற குரல் கேட்டுப் பாது திடுக்கிட்டுத் திரும்பினான். அவனே நிறுதிப்பெண்று அப்போது விட்டாளு, என்ன!



"நான் அம்பி இல்லே...பாலு" என்று பதிலளித்தான் அவன்.

"அப்படியா?...எத்தனாவது வகுப்பு படிக்கிறாய்?"

"நாலாவது பாரம்."

"நிஜமாகவா?"

"ஆமாம்."

"என்ன வயசு உனக்கு?"

"பன்னிரண்டு."

"தேவலியே..."

அவர் உட்கார்ந்தார். அவருடைய தோல்பை அழகாக இருக்கவே, அதைப் பார்த்தான் பாலு. மகாதேவன் பி. ஏ. என்று எழுதியிருந்தது. அதன்கீழ் இருந்த விலாசத்தைப் படிக்க முடியவில்லை. வாயில் நுழையாத பெயராக இருந்தது அது.

அவருக்கு வயது முப்பதுக்குப் பக்கமாக இருக்கலாம். செப்புத்தான், கறுப்புப் பொத்தான் போன்ற கண்கள். தலையைப் பின்புறமாக வாரியிருந்தார்.

"நீங்கள் பி. ஏ. வா மாமா?"

"ஆமாம்டா..."

"கல்யாணம் ஆயிடுத்தோ?"

"எதற்காகக் கேட்கிறாய், அம்பி?"

"வெறுமனேதான் கேட்டேன்" என்றான் பாலு. பிறகு அவரையே, "உங்களுக்கு நிறையப் பணம் கிடைக்கும், மாமா! இல்லையா?" என்றான்.

"அடேடே! ஜோசியம் கூடத் தெரியுமா உனக்கு?"

"இதுக்கு ஜோசியம் தெரிய வேண்டாம், மாமா...!"

"என்ன சொல்கிறாய் நீ?"

"உங்களுக்குக் கல்யாணம்னா வைரத் தோடு, கையில் ரொக்கமா இரண்டாயிரம் கிடைக்கும். கட்டாயம்."

"பெண் கிடைக்க மாட்டாளோ?" என்று சிரித்தார் அவர்.

"பெண்ணோடு சேர்த்துத்தான்."

அவர் அவனையே கூர்ந்து பார்த்தார். சாதாரணமாக அவனுடைய வயதும் பிள்ளைகள் பேசுகிற பேச்சு இல்லை அது. ஏதோ ஒரு வேதனையின் குமுறல் இப்படி வெளிப்படுகிறது.

"எதற்காக எல்லோரும் இப்படிப் பணம் கேட்கிறார்கள், மாமா?"

"எனக்குத் தெரியாது, பாலு!...ஆனால் என்னைப் பொறுத்தவரையில் எனக்கு வைரத்தோடு வேண்டாம், இரண்டாயிரம் ரூபாய் வேண்டாம்...நல்ல பெண் தான் வேண்டும்."

"நீங்கள் நல்லவர்."

அவரிடம் தன் குடும்பப் பிரச்னையை வெளியிட்டுக் கல்யாணத்தை முடித்து விடவேண்டும். இவரைவிட நல்ல மாப்பிள்ளை எங்கே கிடைக்கப் போகிறார்? அப்பா எங்கெங்கோ ஓடுகிறாரே! இந்த



ஓய்வுபெற்ற விவசாய உதவி டைரக்டர் திரு கே. வெங்கட்டராமய்யரின் சஷ்டியப்த பூர்த்தி வைபவம் இம் மாதம் 10ந் தேதியன்று சென்னை நுங்கம்பாக்கத்தில் விமரிசையாக நடைபெற்றது.

நகரசபைத் தோட்டத்திலல்லவா கந்தர்வப் பெண்ணும், நல்ல மாப்பிள்ளையும் ஒதுங்குகிறார்கள்!

ஆனால் அக்காவின் துரதிர்ஷ்டத்தை என்ன என்பது! இச்சமயம் பார்த்து இரண்டு பருமன்கள் அங்கு வந்து சேர்ந்தன. அவை அந்த மகாதேவனின் தாய் தந்தையர் என்பது தெரிந்ததும், பாலு தன் கட்சி தோற்றுப் போனதாகவே எண்ணி விட்டான். அந்த அம்மாள் எதற்கும் மசிய மாட்டாள் என்று உள்ளுணர்வு சொல்லிற்று. உலகத்தில் நல்ல மாப்பிள்ளைகளுக்குப் பஞ்சமில்லை. நல்ல மாமனார் மாமியார்தான் இல்லை என்று அவனுக்குத் தோன்றியது!

"யார் இந்த அம்பி?" என்று கேட்டார் மகாதேவனின் தந்தை.

"நான்தான் பாலு...நாலாவது பாரம் படிக்கிறேன். எங்கப்பா சபேசய்யர் தாலூகா ஆபீஸ் குமாஸ்தா" என்று கூறினான் பாலு.

"பையன் ரொம்ப சூட்டிகை!" என்றாள் தாயார்க்காரி.

பாலு தயங்காமல், "இந்த மாமாவுக்கு எப்போ கல்யாணம்?" என்று கேட்டு விட்டான்.

பருமன்கள் விழித்தன.

"வைரத்தோடு, ரொக்கம் ஒன்றும் வேண்டாம் என்கிறார் இந்த மாமா... நிஜமாவா?"

தாயார்க்காரி சிரித்தாள். "அவன் என்னத்தைக் கண்டான்? குழந்தை!" என்றவள் தன் கணவனைப் பார்த்து, "தஞ்சாவூர்க்காரர் நேற்றுகூட வந்து விட்டுப் போனார்...மூவாயிரம் ரூபாயை

வைத்துக் கொண்டு மன்றாடினார். நீங்கள் தான் பிடி கொடுத்துப் பேசவில்லை'' என்று அலுத்துக் கொண்டாள்.

''அவருக்குப் பிடி கொடுத்தால் ஆளை தொலைத்து விடுவார்... அந்த இடம் நமக்கு வேண்டாம், மாயவரமே தேவலை'' என்றார் தந்தை.

''ஊஹூம். அதற்குப் பட்டணத்துப் பெண் பரவாயில்லை.''

''மதுரை?''

''ஐயோ. போதுமே... நாம் போன போது கொடுத்தார்களே காப்பி, அது ஒன்றே போதாதா?''

மகாதேவன் சிரித்தபடி, ''அம்மா! இப்போதைக்குக் கல்யாணமே வேண்டாம். ஊர் ஊராகக் கைக்காசு செலவில்லாமல் க்ஷேத்திராடனம் செய்யலாம். வகை வகையாய்ப் பலகாரம், உபசரிப்பு கிடைக்கும்'' என்றார்.

வேடிக்கையாகச் சொன்னது தாயாருக்குக் கண்ணீரையே வரவழைத்து விட்டது. மகாதேவன் சொல்வது உண்மைதான். எத்தனை இடங்களுக்குப் போய் வந்தாயிற்று! ஒன்றுகூடச் சரியாக அமையவில்லையே!

''இதோ பார், மகாதேவா... நான் பேராசைப் படவில்லை. ஏதோ நம் அந்தஸ்துக்குத் தகுந்த இடமா, பெண் அழகாக அமைந்தால் போதும்... கையில் ஆயிரம் ரூபாய் மட்டும் தரட்டும். அப்புறம் அவர்கள் இஷ்டப்படிச் செய்து கல்யாணத்தை முடிக்கட்டும், போதும்'' என்று கூறினாள்.

வீட்டுக்கு வந்தபோது பாலுவுக்கு இதே யோசனை. மகாதேவன் ரொம்ப நல்லவர். அவர் மட்டும் அக்காவின் கணவராக அமைந்தால் அக்காவும் அதிர்ஷ்டசாலி, அவனும் அதிர்ஷ்டசாலி. ஆனால் அது எப்படி முடியும்?

மறுநாள் இதே யோசனையோடு பூங்காவுக்குப் போனான். சிமிட்டிப் பலகையில் உட்கார்ந்தான். சிறிது நேரத்தில் தோல் பையுடன் அவர் வந்தார். பாலு மரியாதையாக எழுந்து நின்றான்.

''உட்கார், பாலு... தினசரி இங்கே வருவாயோ?'' என்று கேட்டார் அவர்.

''ஊஹூம்... இரண்டு நாட்களாய்த் தான். மனசே சரியில்லை, மாமா!''

''ஏன்? என்ன நடந்தது, சொல்லேன்.''

அதற்குமேல் பாலு எதையும் மறைக்கவில்லை. சொல்லி முடித்தான். அதைக் கேட்டு அவர் நெகிழ்ந்து போனார்.

''எங்க வீட்டுல எல்லோரும் நல்லவர்கள், மாமா! ஆனால் கல்யாணம் எப்படி நடக்கும்? அப்பா பணத்துக்கு எங்கே போவார்?''

மகாதேவன் ஒன்றும் சொல்லவில்லை.

''ஒரு வருஷம் பொறுத்திருக்க முடியுமா, மாமா?''

''எதற்கு?''

''கல்யாணத்துக்கு. அதற்குள் பணம் வந்து விடும்.''

''எங்கிருந்து?''

''நான் சம்பாதித்து விடுவேன், மாமா!''

அவனுடைய பதில் அவருக்கு வியப்பைத் தந்தது. ஒன்றும் சொல்லாமல் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''என்ன, மாமா?''

''பாலு, நீ குழந்தை. உனக்கு உலகம் தெரியாது. உன் நல்ல மனசுக்காக நான் சுந்தரியை மணந்து கொள்ளத் தயார். ஆனால் என் அம்மாவும் அப்பாவும் ஒப்ப வேண்டுமே?''

''அவர்களுக்கு வேண்டியது பணம் தானே?... நான் சம்பாதித்துத் தந்து விடுகிறேன்.''

''நீ எங்கே சம்பாதிப்பாய்?''

கேள்வி பாலுவை உலுக்கி விட்டது. ஆம், அவன் எங்கே சம்பாதிப்பான்? ஒரு ரூபாயா, இரண்டு ரூபாயா? அக்காவின் கல்யாணம் நடைபெறாமலே போய்விட வேண்டியதுதானா?

ஊஹூம்! பாலு நிமிர்ந்து அவரைப் பார்த்தான். ''மாமா! பணம் தானே வேண்டும்?... திருடியாவது கொண்டு வந்து தருகிறேன்!'' என்றான்.

''பாலு! என்ன பேச்சுப் பேசி விட்டாய்? திருடுவது பாவம் இல்லையா?''

''பாவம்தான். ஆனால் வேறு வழி இல்லாதபோது என்ன செய்வது, மாமா!'' என்றான் அழாக்குறையாக.

அவர் உடல் ஆடியது. உள்ளம் ஆடியது. கண்களில் நீர் சுரந்தது. தோல் பையைத் திறந்தார். ஒரு கவரை வெளியில் எடுத்தார். அவன் கையில் திணித்தபடியே, ''இந்தா, பாலு!... உன் அப்பாவிடம் இதைக் கொடு. நீ திருடக் கூடாதடா, பாலு... நீ திருடக்கூடாது. இதில் ஆயிரம் ரூபாய் இருக்கிறது. நான் சேர்த்த பணம்... இதைக் கொண்டு மூன்றாம் பேருக்குத் தெரியாமல் காரியத்தை முடிக்கச் சொல்!'' என்றார்.

''அத்திம்பேர்!'' என்று அலறினான் பாலு. மகாதேவன், கண்களில் சுரந்த நீருடனே, அவனைப் பார்த்தார். அடுத்த கணம் காம்பவுண்டைத் தாண்டித் தெருவில் மிகுந்த மகிழ்ச்சியோடு ஓட்டமாக ஓடிக் கொண்டிருந்தான் அவன்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

